கழக வெளியீடு ௯அ

# தமிழ்ச் சங்கங்களின் வரலாறு



ஆசிரியர்
திருமந்திரமணி, தமிழ்[illegible]கிழார்
ஆ. சிதம்பரனார்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி . . . சென்னை 1

முதற் பதிப்பு நவம்பர், 1948.





*Published by*

**THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,**

**TINNEVELLY & MADRAS 1**

அப்பர் அச்சகம், 6, டேவிட்சன் தெரு, சென்னை 1.

# பதிப்புரை

எவ்வகை வாழ்வும் எழிலுற நடந்து இன்புறச் சங்கங்கள் இன்றியமையாதன. அம்முறையில் தொன்மைத் தமிழ்மக்கள் பன்னெடுங் காலங்கட்கு முன்பே "தமிழ்ச் சங்கம்" கண்டு, சீரும் சிறப்பு மலிய நடத்தி, அதன் பயனைக் உலகத்துக்கே நனிநாகரிகம் நல்கி உயர்ந்தனர். அச்சங்கங்களில் வேந்தரும் புலவரும் வேற்றுமையின்றி வீற்றிருந்து விழுமிய செந்தமிழ்த் தொண்டாற்றினர்.

பின், வேற்றுப்புல மக்கள் விரவித் தங்கள் வெளிப்பகட்டாலும் ஒலிப் பெருக்காலும் செந்தமிழ் மக்களைத் திகைப்புறுத்தித், தம் வழிச் சாத்தனர். அவர்களும் அம்மயக்கில் வீடுபட்டுத் தம் தாய்மொழியையுந் தமிழ் நாகரிகத்தையும் போற்றும் தனித்தொண்டை மறந்தனர். தண்டமிழ்நாடு உலகங்கண்டறியாத பெருவளமுற்று,

"பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து"

என்னுந் தமிழ்மறைக்கேற்ப, வணிகத்தாலும் பணிமிகு கைத்தொழிலாலும் சிறந்திருந்தது. அச்சிறப்பை நாடி வெளிநாட்டு வணிகர்களும், மன்னர்களும் ஒருவர்பின் ஒருவராய் வளங்கொண்டும் போர் புரிந்தும் நாட்டை மாறுபடுத்தினர். அதனாலும் தமிழ்ச் சங்கங்களுக்கு உலைவு நேர்ந்தது.

இந்நிலையில் ஆங்கில ஆட்சி நிலைத்தது. அவ்வாட்சியில் வரலாற்று நூல் எழுதினாரும், ஆராய்ச்சி நூல் வெளியிட்டாரும் செந்தமிழ்மொழியால் வாழ்ந்தும், அம்மொழிக்கு ஆக்கந்தேடாது, பிறமொழி மயக்கால் நடுநிலை குன்றித் தமிழ்ச் சங்கங்களின் காலப் பழமையை மிக அண்மைக் கிழமையாக்கி வழுவினர். அவற்றையெல்லாம் பொருந்துமாறு மறுத்து, வலிய சான்றுகளுடன் உண்மை காட்டி, ஆசிரியர் இந்நூலகத்துத் தெளிவுபடுத்தியுள்ளார். இந்நூலுணர்ச்சி, நம் தமிழ் அன்னையைத் தொன்மைச் சங்க அரியணை மீதமர்த்தி, மாசற்ற தூய தமிழ்வளஞ்சார்ந்த புதுப்புது மணியணி யணிவித்துத் தமிழர்களுக்கே யுரியவென உலகங்கூறும் பண்டைய நாகரிகத்தைக் கைக்கொண்டு நாடும் மொழியும் நன்னெறியும் கடைப்பிடித்தொழுகச்செய்து, நம்மையும் மேம்பொருளாக்கி, உலகம் மதிக்கச் செய்யும்.

இத்தகைய சீரிய நூலை ஆக்கித் தந்த திரு. திருமந்திரமணி துடிசைகிழார் அ. சிதம்பரனார் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

இந்நூலைத் தமிழுலகம் வாங்கிக் கற்று இன்புற்று எங்களை ஊக்குமாக.

—தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை







# முகவுரை

"ஐந்திணை அகநூல," என்ற இறையனார் களவியல் நூலை, நக்கீரர் I வகுத்த உரையுடன் படிக்கும்போது, ஒருவன் தலை—இடை—கடை ஆகிய முச்சங்கங்களைப்பற்றியே கூறப்பட்டுள்ளதைக் காண்கிறான்

ஆனால், சங்க இலக்கியங்களையும், சங்க காலத்துக்குப் பிற்பட்ட இலக்கியங்களையும் படிக்கும்போது, முச்சங்கங்களுக்கு முந்தியும் பிந்தியும் தமிழ் நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்றதற்குச் சான்றுகள் நிறைய இருக்கின்றன. அச்சான்றுகளை எல்லாம் திரட்டிப் பின் இணைப்பு I என்ற தலைப்புடன் இந்நூலில் சேர்த்துள்ளேன்.

பின் இணைப்பு I-ல் காட்டப்பட்டுள்ள ஆதாரங்களை ஒருவன் அமைதியாகவும், வேறுபட்ட மனம் இல்லாமலும் நோக்குவானேயானால், தமிழ்ச் சங்கங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக, இத் தமிழ் நாட்டில் நடைபெற்று வந்தன, இன்றும் நடைபெற்று வருகின்றன என்ற முடிவுக்கு வந்தே தீருவான்

கடைச்சங்கப் புலவரான ஒளவையாரும், தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும் கடைச்சங்கத்தைப் பற்றிப் பாடியிருப்பாரேல், தமிழ்ச்சங்கம் நடைபெற்றதைப்பற்றி யாரேனும் ஐயங்கொள்ளுவார்களா? அப்படிக் கொள்ளுவார் ஆனால் அவர்களை என்னென்பது?

"உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையாய் வைக்கப் படும்." (குறள் ௮௫௰)

என்னும் முதுமொழிக்கு இலக்கானவர்.

அகம் - புறம் முதலிய தொகை நூல்களில், தமிழ்ச்சங்கங்களில் உறுப்பினர்களாயிருந்த புலவர்களுடைய பாட்டுக்களே உள்ளன. ஆதலின், சங்கங்கள் நடைபெற்றதைப்பற்றி ஐயுறக் காரணம் சிறிதும் இல்லை.

கடைச்சங்கம் அழிவெய்திய பதினைந்து ஆண்டுகளுக்குப்பின் வாழ்ந்த மாணிக்கவாசகர் (250—282 A. D.) கடைச்சங்கத்தைப் பற்றிப் பேசுவாரானால், அவர் சொல்லிலும் ஐயம் உண்டோ? அவர் பாண்டியன் முதல் மந்திரியாய் இருந்து, கடைச்சங்கம் நடைபெற்று வந்ததற்கு ஆதாரங்களை அரசாங்க நூல்நிலையத்தில் இருந்து பார்த்தவர் அன்றோ? அதனால் அல்லவோ "கூடலில் ஆய்ந்தஒண் தீந்தமிழின், துறைவாய் நுழைந்தனையோ," என்று ஆனந்தக் கூத்தனைக் கேட்கிறார்.

ஆதலின், தமிழ்ச் சங்கங்கள் தமிழ் நாட்டில் பல்லாயிரம் ஆண்டுகளாக நடைபெற்றன, நடைபெற்று வருகின்றன என்பதற்கு ஐயம் கிடையாது.

இந்நூலின்கண் பதின்மூன்று தமிழ்ச்சங்கங்களைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. அச்சங்கங்கள் நடைபெற்றன என்பதற்கு இலக்கியச் சான்றுகளும், இதுவரை கிடைத்துள்ள செப்பேடு, கல்வெட்டுச் சாசன ஆதாரங்களும் காட்டப்பட்டுள்ளன. தமிழ்நாட்டுச் சங்கங்களைப்பற்றிப் பிறநாட்டு வரலாற்றுச் சான்றுகளையும் காட்டியுள்ளேன்.

சங்கங்கள் என்றால் இக்காலத்துப் பல்கலைக்கழகம் (University) போன்றது என்று கொள்ளவேண்டும். மாணவர்கள் சங்கத்திலேயே இருக்க—படுக்க—உண்ண—உடுத்த முதலிய எல்லா வசதிகளையும் பெற்று வந்தார்கள் அஃதாவது, குருகுலவாசம் (Residential University) என்னப்பட்ட சங்கங்களாக இருந்தன.

இச்சங்கங்களில் சீனு (China), காந்தாரம் (Afganistan), எகுபதியம் (Egypt), பாபிலோனியா, அக்கேடியா, அமேரியா, பாரசீகம், இலங்கை முதலிய இடங்களில் இருந்தும் மாணவர்கள் வந்து படித்துச் சென்றுள்ளார்கள் என்று தெரிகிறது.

நாலந்தா (Nalanda), தக்கசீலம் (Taxilla) முதலிய ஆரிய நாட்டுப் பல்கலைக் கழகங்கள் ஏற்படுவதற்குப் பன்னூறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே, தமிழ் நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்று வந்தன என்பதற்கு வடநாட்டு ஆரியர்கள் நூற்களிலேயே ஆதாரங்கள் உள்ளன.

"சங்கம் என்ற சொல்லே தமிழ்ச்சொல் அன்று, அது வடமொழிச்சொல், அதனால் தமிழில் சங்கம் என்பதற்குச் சரியான சொல் கிடையாது. வடநாட்டில் நடந்த நாலந்தா, தக்கசீலம் முதலிய சங்கங்களைப் பார்த்து, தென்னாட்டிலும் தமிழ் மொழிக்குச் சங்கங்கள் இருந்ததாகக் கதை கட்டியுள்ளார்கள்," என்று வாய் கூசாது கூறுபவர்களும் இந்நாட்டில் உண்டு.

மொழிநூல் வல்ல மாகறல் கார்த்திகேய முதலியார் அவர்களும், யாழ்ப்பாணத்து ஞானப்பிரகாசப் பாதிரியாரும், பன்மொழிவல்ல தேவநேயப் பாவாணரும் 'சங்கம்' என்ற சொல் தமிழே என்று அறுதியிட்டுள்ளதை அவரவர்கள் நூல்களிற் காண்க.

மேலும், இப்போது பதிப்பிக்கப்பட்ட தொல்காப்பியத்தில், தப்பாகப் பிரசுரிக்கப்பட்ட சூத்திரங்களை வைத்துக்கொண்டு, பகுத்தறிவையும் பறிகொடுத்துவிட்டு, சகரம் மொழிக்கு முதலில் தமிழ் மொழியில் வராது என்று தொல்காப்பியர் சூத்திரம் செய்துள்ளார். ஆதலால், 'சங்கம்' என்ற சொல் வடமொழியே ஒழியத் தென்மொழியன்று என்று பிடிவாதமாகக் கூறுபவரும் உண்டு. அந்தத் தொல்காப்பியச் சூத்திரம் வருமாறு'—(Vide செந்தமிழ்ச்செல்வி சிலம்பு 15, பரல் 2, பக்கம் 67—69)

"க—த—ந—ப—ம எனு மா வைந்தெழுத்தும
எல்லா உயிரொடும செலலுமாா முதலே.
சகரக கிளவியும அவற்றோ ரற்றே
அவை ஔ வெனும ஒனறலங கடையே"

எனபது தான தொலகாப்பியா சூததிரததது.

ஆனால், இப்போது பதிபபிததவாகள் இந்த ஒரு சூத்திரததை இரணடு சூததிரஙகளாக்கி, கடைசி அடியை

"அ—ஐ—ஔ எனும் மூன்றலங் கடையே"

என்று பதிப்பிததுள்ளாாகள்.

ஏடு பெயாத்து எழுதினவன செய்த தவறானது பணடிதாக ளுடைய அறிவையே மயககிவிட்டது; தமிழ் நாட்டில சஙகம இருந்ததிலலை என்று தமிழுககு எதிரியாக உளளவாகள கூற ஒரு கருவியாக உபயோகப்படுகிறது.

சூததிரததின் பொருள —

"க—த—ந—ப—ம எனனும் ஐந்து மெயயெழுததுககளும எல்லா உயிரெழுததுக்களோடுங கூடிப பெருவாவிற்றய் மொழிககு முதலாக வரும.

ச என்ற மெயயெழுததும அவ்வைநது மெயயெழுததுககளைப் போலவே, எலலா உயிரெழுததுககளோடுஙகூடிச சிறுவாவிற்றய் மொழிக்கு முதலாக வரும.

ஆனால், க—ச—த—ந—ப—ம என்ற ஆறு மெயயெழுததுக களும ஔ எனனும உயிரெழுததோடுஙகூடிமாததிரம மொழிககு முதலாக வாரா.

மேற்கோள —

| | சரியானது | பிழையானது |
|---|---|---|
| 1. | கவ்விறறு | கௌவிறறு |
| 2. | சவ்வரிசி | சௌவரிசி |
| 3. | தவ்வை | தௌவை |
| 4. | நவ்வி | நௌவி |
| 5. | பவ்வம | பௌவம |
| 6. | மவ்வல் | மௌவல |

என்பதே."

ஆனால், தொல்காப்பியம படித்த சிலரும், படியாத பலரும், படிததும பிடிவாதக குணமுள்ள சிலரும மேலேகாட்டிய சொற் களைப் பிழையாகவே எழுதி வருகிறதைச செயதித தாளகளில

பார்க்கலாம். ஆகையால், தமிழர்கள் விழிப்படைந்து, தவற்றை உணர்ந்து சரியானபடி மேற்கண்ட சொற்களை எழுதி வரவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

தப்புவழியாகிய "அ—ஐ—ஔ எனும் மூன்றலங்கடையே" என்ற அடியின்படி பொருள் செய்வோமானால் க—ச—த—ந—ப—ம என்ற ஆறு மெய்யெழுத்துக்களும் அ—ஐ—ஔ என்ற மூன்று உயிர் எழுத்துக்களோடும் சேர்ந்து மொழிக்கு முதலில் வராமல் இருக்கவேண்டும் வழக்கத்தில் அப்படி இல்லை. இலக்கியங்களி லும் அப்படி இல்லை. இலக்கியங்கண்டதற்கு இலக்கணமே யொழிய, இலக்கணத்திற்காக இலக்கியம் இல்லை

மேலும், அ என்ற எழுத்தோடு சேர்ந்து அம் மெய்யெழுத்துக் கள் வரவில்லையென்றால், வேறு எந்த உயிரோடும் வர முடியாது என்னெனின், எல்லா உயிர்களும் அகரத்தினின்றுமே பிறந்தன என்பது நூற்றுணிபு.

கடைசி அடியாகிய அந்தத் தவறான அடியை சகரத்துக்கு மாத்திரம் தற்காலப் பண்டிதர்கள் கொள்ளுகிறமாதிரி கொண்டால், சகரம் அகரத்தோடும், ஐகாரத்தோடும், ஔகாரத்தோடும் மொழிக்கு முதலாக வரக்கூடாது சங்க இலக்கியங்களைப் பார்த்தால் அதற்கு நேர்முரணைக் காணலாம்.

தொல்காப்பியத்திலேயே இரண்டு சூத்திரங்கள் சகரத்தை மொழிக்கு முதலாக வைத்துச் செய்யப்பட்டுள்ளன. தொல்காப்பி யர் "அ—ஐ—ஔ எனும் மூன்றலங் கடையே" என்று சூத்திரம் இயற்றி இருந்தால், அதற்கு முரணாக சகரத்தை மொழிக்கு முதலில் வைத்து இரண்டு சூத்திரங்கள் செய்வாரா? உன்னிப் பாருங்கள்.

மேலும்,

"தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்"
(பரிபாடல்—20)
"மனபதை சவட்டும் கூற்றம் என்ப"
(பதிற்றுப்பத்து—84)
"பஞ்சாயக் கோரை பலவிற் சவட்டி"
(பெரும்பாணாற்றுப்படை—217)
"சந்து நீவிய புனமுடிந்திடுமின்"
(மலைபடுகடாம்—393)

என்ற அடிகளை நோக்கும்போது, தொல்காப்பியத்தை இலக்கண மாகக்கொண்ட சங்கநூற் புலவர்கள் சகரத்தை மொழிக்கு முதலாக வைத்துப் பாடி இருக்கமாட்டார்கள்

"சையொத்திருந்தால் ஐயமிட் டுண" என்று சகரம் ஐகாரத் தோடு மொழிக்கு முதலாக வைத்து ஔவையார் பாடியிருக்க மாட்டார்.

இவைகளை எல்லாம் கூர்ந்துநோக்காது, உலக வழக்கையும் சிந்தியாது, "வாயை புளித்ததோ மாங்காய் புளித்ததோ," என்று கூறிவிடக்கூடாது.

ஆதலின், சங்கம் என்ற சொல் தமிழ்மொழிச் சொல்லே; தமிழ் நாட்டில் பல தமிழ்ச்சங்கங்கள் வடநாட்டில் நடந்த வடமொழிச் சங்கங்களுக்கு முன்னேயே நடைபெற்று வந்தன. சங்கம் என்ற சொல் தமிழ் மொழியிலிருந்துதான் வடமொழிக்குச் சென்று பயிலப்பட்டு வருகிறது. தமிழ் மொழியினின்றும் இன்னும் எத்தனையோ சொற்கள் வடமொழிக்குச் சென்று பயிலப்பட்டு வருகின்றன என்பதை ஒவ்வொருவரும் மனதில் பதித்தல்வேண்டும்.

இப்படிப் பலவாயிர ஆண்டுகளாக நடைபெற்றும், சேர—சோழ—பாண்டிய மன்னர்களாலும், தமிழ் நாட்டுப் பிற வள்ளல்களாலும் ஆதரிக்கப்பட்டும் வந்த புகழ்பெற்ற சங்கங்களின் சரித்திரங்களைக் காலவரையறையுடன் ஒருவரும் எழுதிவைக்கவில்லையே என்ற கவலை எனக்குச் சிறுவயதில் கலாசாலையில் படிக்கும்போதே ஏற்பட்டது. அதுமுதல் நான் நூல்களைப் படிக்கும்போது சங்கங்களைப் பற்றிக் குறித்துவைத்த குறிப்புகளை யெல்லாம் நான் அரசாங்க அலுவலினின்றும் 1935-ல் ஓய்வு எடுத்துக்கொண்டபின், ஒன்று சேர்த்து எழுதிவைத்தேன். என் நண்பர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் 1948 ஜூன் மாதம் இவண் வந்திருந்தபோது அவரிடம் காட்டவே, அவர், அதனைப் பார்த்து, புத்தகமாக வெளியிட்டால் பலருக்கும் பயன்படும் என்றும், சங்கத்தைப்பற்றிய ஐயம் சூரியனைக் கண்ட பனிபோல நீங்கும் என்றும், காலவரையறையுடன் விளக்கப்பட்டிருப்பதால், இருட்டறைக்குள் போகக் கையில் விளக்கு இருப்பதுபோல, தமிழ் நூல்களைப் படிப்பதற்கு இந்நூல் பெருந்துணை செய்யும் என்றும் கூறிக் கையெழுத்துப் படியை வாங்கிக்கொண்டுபோய், அதனைக் கழக வெளியீடாக வெளியிட்டுள்ளார்கள். அவருக்கு இறைவன் எல்லா நன்மைகளையும் மேன்மைகளையும் அளிப்பானாக!

இம்மாதிரியே "அகத்தியர் வரலாறு", "ஔவையார் வரலாறு", "தென்னாட்டு வரலாறு" என்ற நூல்களையும் எழுதிவைத்துள்ளேன். அவைகளும் விரைவில் வெளிவந்தால் உலகில் தமிழ் நாட்டைப்பற்றிய உண்மை வரலாறு நடைமுறைக்கு வரும்.

அக்காலத்தினை எதிர்பார்த்து, இறைவன் திருவடியையும் சிந்தித்து இம்முகவுரையை முடிக்கின்றேன்.

கோவை,
15—2—'49.

திருமந்திரமணி—துடிசைகிழார்
அ. சிதம்பரனார்.

# மேற்கோள் குறிப்பு அகராதி.

---

## சில திருத்தங்கள்.

| பக்கம் | பிழை. | திருத்தம். |
|---|---|---|
| 71. வரி - 17. | அகர முனிவன் | அமர முனிவன் |
| 72. வரி - 19. | செம்பூட்சேய் (பாண்டியன்) | செம்பூட்சேய் (பாண்டியன்) கூற்றியல் |
| 133. வரி - 1. | கடைச்சங்கம் | வச்சிரநந்தி தமிழ்ச்சங்கம் |
| 135. வரி - 1. | ,, | ,, |
| 137 வரி - 1. | ,, | ,, |
| 139. வரி - 5. | VII | XII |

---

## கால வரையறையுடன்

# தமிழ்ச்சங்கங்களின் வரலாறு

### தோற்றுவாய்

களவியல் நூலையும், அதன் உரையையும் ஒருவன் படிப்பான் ஆனால், அவனுக்குத் தமிழ்ச் சங்கங்களின் வரலாறு கால வரையறையுடன் தெரியவேண்டியது இன்றியமையாதது என்று தோன்றும்.

“சங்கங்களின் கால வரையறை தெரியாத வரையில் பழையது புதிது ஆகவும், புதியது பழையது ஆகவும், மெய் பொய்யாகவும், பொய் மெய்யாகவும், முன் இருந்த ஆசிரியர் பின் இருந்தவராகவும், பின் இருந்த ஆசிரியர் முன் இருந்தவராகவும் கொள்ளப்பட்டு, உண்மை சிறிதும் விளங்காமல் பெரியதொரு தலைதடுமாற்றமே தலைவிரித்தாடும். இத்தகைய தலைதடுமாற்றப் பேயால் பிடியுண்டு நிற்கும் வரையில் மக்கள் பொய்யான வழிகளில் அலைந்து திரிந்து மீளாத் துன்பத்திற்கு ஆளாகி நிற்பர். ஆனதனால்தான் உண்மையை உள்ளவாறு உணர்ந்து இம்மக்கட் பிறவியை உண்மை நெறியிற் செலுத்தி முன்னேற்றுதற்கு, அறிவையும் இன்பத்தையும் தமக்கு வழங்கிய தம் ஆசிரியர்கள் இருந்த காலங்களையும், அக்கால நிலைகளையும் உணர்வதில் ஐரோப்பிய அறிஞர்கள் பெருவேட்கையும் பெருமுயற்சியும்

உடையவர்களாய் இருக்கின்றனர். முற்காலத்திருந்த அறிஞர்களின் உண்மைநிலைகளை எல்லாம் உண்மையாக ஆராய்ந்து அறிந்து உண்மை அறிவில் தலைசிறந்து வருதலினலேதான் மேனுட்டு வெண்மக்கள் அறிவிலும், ஆற்றலிலும், நாகரிகத்திலும், இன்ப வாழ்விலும் நாளுக்கு நாள் வளர்பிறைபோல் வளர்ந்து, அவ்வுண்மை அறிவு வாயாத மற்ற நாட்டவர்களை எல்லாம் தம் அடிக்கீழ்ப் படுத்துச் செங்கோல ஓச்சி வருகின்றனர்.

கால ஆராய்ச்சி செய்து அவ்வக்கால நிலைகளையும், அவ்வக் காலத்தில இருந்த ஆசிரியர்களையும் உணராமையினல் தான், நம நாட்டவர்கள் பொய்க் கதைகளிலும், பொயத் தெய்வ வணக்கங்களிலும, போலி ஆசிரியர் மருள் உரைகளிலும், வீழ்ந்து மயங்கி உண்மை அறிவு வாயாதவர் களாய், அதனல தம பிறவியைப் புனிதப்படுத்தும வழிவகைகள் தெரியாதவர்களாய, அறிவும ஆற்றலும இன்றி, தம் முட் பொருமையும, பகைமையும கொண்டு, நோயிலும், வறுமையிலும் உழன்று, தீவினைக்கு ஆளாகி, மங்கி, மடிந்து போகின்றனர். எனவே, இம்மககட் பிறவியைத் தெய்வப் பிறவி ஆககுதற்கு இன்றியமையாத கருவியாய் மேம்பட்டு விளங்குவது கால ஆராய்ச்சியால் உரங்கொண்டு துலங்கும் மெய்யறிவு விளக்கமே யாம்," என்று "மாணிக்கவாசகர் வரலாறு" என்னும் புத்தக முகவுரையில் அதன் ஆசிரியர் கூறுவது காண்க.

ஆதலின், கூடுமான வரையில் இதுவரை கிடைத்த கல் வெட்டுகள், சாசனங்கள், இலக்கிய ஆதாரங்கள், நாட்டுச் சரித்திரங்கள் இவைகளைக் கொண்டு, தமிழ் நாட்டில் நடைபெற்ற தமிழ்ச்சங்கங்களின் காலங்கள் ஒருவாறு நிச்சயித்து ஈண்டு எழுதப்பட்டிருக்கின்றன. இக் காலங்கள்

இனி வரும் ஆராய்ச்சியால் சிறிது மாறுபட்டாலும் படலாம்.

ஈண்டுக் குறிப்பிடப்பட்டவை கி. மு. 30,000 முதல் கி பி. 20-ம் நூற்றாண்டு வரை நடந்த, நடக்கின்ற தமிழ்ச் சங்கங்களே யாம்.

கி. மு. 30,000 க்கு முன்னும் தமிழ்ச் சங்கங்கள் இருந்தன என்று தெரிகிறது. ஆனல், அவைகளின் வரலாறுகள் தெள்ளத் தெளியத் தெரிய வாராததால, ஈண்டு இப்போது விடப்பட்டன.

சங்க நூல்களாலும், சமண நூல்களாலும், பிற நாட்டுச் சரித்திரக் குறிப்புகளினாலும், கல வெட்டுககளாலும, தாமிர சாசனங்களாலும நமக்கு நன்றாயப் புலப்பட்டவற்றையே ஈண்டுக் கூறியிருக்கின்றோம்.

தமிழ் நாட்டுச் சரித்திரம் இமயமலே தோன்றிய (கி. மு 20,000,000) காலம் முதற்கொண்டு பல ஆதாரங்களுடன் எழுதப்பட்டுவருகின்றது. அது வெளியாகுமபோது, தமிழ்ச் சங்கங்களைப்பற்றி இன்னும் பல வரலாறுகள் வெளிவரலாம்.

இனி, கி மு. 30,000 முதல் நடைபெற்ற தமிழ்ச் சங்கங்கள் இன்னின்னவை யென்பது, அவைகளின் காலம், சங்கம் இரீஇயினர் வரலாறு, பாடப்பட்ட நூல்கள் முதலியவைகளைப்பற்றிக் கூறுவாம்.

---

# I. பஃறுளியாற்றுத் தென்மதுரையில் நடைபெற்ற தமிழ்ச் சங்கம்

(உருவ எழுத்துக் காலம்)

(1) காலம்:—கி. மு. 30,000 முதல் கி. மு. 16,500 வரை 13,500 ஆண்டுகள்.

(2) இடம்:—பஃறுளியாற்றின் கரையில் இருந்த தென் மதுரை என்னும் நகரம்.

(3) சங்கம் இரீஇய அரசர்:—பாண்டியன் நெடியோன். இவனுடைய மறுபெயர்களாவன :—முதலாம் நிலந்தரு திருவிற் பாண்டியன் ; ஆழி வடிம் பலம்ப நின்ற பாண்டியன ; பாண்டியன் மா கீர்த்தி.

(4) புலவர்:—ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் முதலியோர்.

(5) நூல்.—

(6) பாடப்பட்டன:—

(7) பாடப்பட்டோர்:—ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் முதலியோர்.

(8) கவி அரங்கேறிய அரசர்:—ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் முதலியோர்.

(9) வரலாறு:—பஃறுளி என்னும் யாறு பெருவள நாட்டுக்கும், ஒளிநாட்டுக்கும் இடையில் எல்லையாக மேருமலைத் தொடரினின்றும் உற்பத்தியாகிக் கீழ் நோக்கி ஓடிக்கொண்டு இருந்தது. இதனை:—

"அக்காலத்து அவர் நாட்டுத் தென்பாலிமுகத்திற்கு (ஒளிநாட்டுக்கு) வடவெல்லையாகிய பஃறுளி என்னும்

ஆற்றிற்கும், குமரி என்னும் ஆற்றிற்கும் இடையே......" என்று அடியார்க்கு நல்லார் கூறுமாற்றான் அறிக.

பஃறுளி என்னும் ஆறானது இயற்கை நதி அன்று; வெட்டப்பட்ட ஆறு.

"நிலந்தந்த பேருதவிப்
பொலந்தார் மாரின் நெடியோன் உம்பல்"

*　　　*　　　*

என்னும் மதுரைக் காஞ்சி அடிகளால், நெடியோன் என்ற முதலாம் நிலந்தரு திருவிற் பாண்டியன் இவ்வாற்றை மேருமலைத் தொடரினின்றும் வெட்டிப் பெருவளநாட்டை வளப்படுத்தினான் என்று அறிகிறோம். இவனே பஃறுளி ஆற்றங்கரையில் ஓர் அழகிய நகரத்தை உண்டாக்கி, அது ஏழ்மதுரை நாட்டுக்குத் தெற்கே இருந்ததால் 'தென் மதுரை' எனப் பெயரிட்டு, அதனை அரச இருக்கை யாக்கி, அங்கிருந்து ஒளிநாடு, பெருவளநாடு, குமரிநாடு, பாண்டியநாடு முதலிய நாடுகளை ஆட்சிசெய்து வந்தான்.

தென்மதுரையின்கண் இவன் ஒரு தமிழ்ச் சங்கம் இரீஇ முத்தமிழையும் வளர்த்து வந்தான் என்று 'குமரிக் கண்டம்' எனனும் நூலாசிரியரும் கூறுவது காண்க.

முதலாம் நிலந்தரு திருவிற் பாண்டியன் என்ற ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியனின் வழிவந்த பாண்டி யன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமை யார் எனனும் புலவர் பாடிய புறப்பாட்டில் குடுமியின் முன்னோனாகிய முந்நீர் விழவின் நெடியோனைப் பற்றிச் சில குறிப்புக்கள் உள. அக்குறிப்புக்களாலும் அவன் சங்கம் இரீஇ முத்தமிழையும் வளர்த்தான் என்று ஏற் படுகிறது.

"செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே" (புறம்—9)

என்பன புறப்பாட்டு அடிகளாகும்

இவ்வடிகளால் விளங்குவது என்னவென்றால் முந்நீர் விழவின் நெடியோனை ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியன் தன்னாட்டில் தனக்குக் கிடைத்த சிவந்த நீர்மையை யுடைய மாற்று உயர்ந்த பசும் பொன்னாலாகிய நாணயங் களை வயிரியர்க்கு, அஃதாவது கூத்தர்—பாணர்—புலவர் களுக்கு, பஃறுளி ஆற்று மணலை வாரிக் கொடுப்பதுபோல பரிசு அளித்துவந்தான் என்பதே

இவன் முத்தமிழையும் வளர்த்துவந்தான் என்பது கூத்தர்—பாணர்—புலவர் என்ற முத்தமிழ் வல்லாரைப் புரந்துவந்தமையால் அறிகிறோம் வயிரியர் என்பது முத்தமிழ் வல்லாரைக் குறிக்கும் ஒரு பழஞ்சொல்.

இவன் முத்தமிழ் வல்லார்க்குத் தாம் அறிந்து வாரிக் கொடுத்தவன் ஆதலால், இவனும் முத்தமிழும் வல்லனாய், சங்கத்தில் கவி அரங்கேறிய அரசனாய் இருந்தான் என்று அறிகிறோம். இவனே குமரியாற்றுக் கப்பால் முத்தங் கொழிக்கும் முந்நீர்க் கடற்கு விழவெடுத்தவனும் ஆவான்.

இவ்வரசன் ஆண்ட பெருவள நாட்டிலேதான் மேருமலை இருந்தது. அதற்கு 49 கோடுமுடிகள் (Peaks) இருந்தன என்று நூல்கள் கூறுகின்றன. மேருமலையின் ஒரு கொடுமுடிக்கு மணிமலை என்று பெயர் இம்மணி மலைப் பக்கம் இருந்தே பேராறு என்ற பெரிய ஆறு ஒன்று ஓடிக்கொண்டு இருந்தது. இப்பேராறு குமரியாற்றுக்கும் பஃறுளியாற்றுக்கும் இடையில் ஓடிய ஆறு ஆகும். இட்

பேராறு வளம்படுத்திய நாடுதான் பெருவளநாடு என்பது இதனை:—

"பேராற் றருகில் பிறங்கு மணிமலையில்
சீராற்றும் செழகோ திறற்செழகோ"

என்ற 'தமிழ் விடு தூதின்' அடிகளால் அறியலாம்.

அம்மணிமலை அருகேதான் இரத்தினக் கனிகள் (Ruby mines) மிகுந்து இருந்தன. மணி=ஒன்பது வகை அரதனக் கற்கள். மணிபடும் மலை: மணிமலை ஆயிற்று.

மேருவைச் சேர்ந்த இதர பாகங்களில் பொன்கனிகள் (Gold mines) மிகுந்து இருந்தன. அதனாலேயே 'மேருவைச் சேர்ந்த காகமும் பொன்னாம்' என்ற பழமொழியும் எழுந்தது.

இப்பொன் கனிகளில் சீனதேசத்து அவுணர்கள் (Mangolians) வேலை செய்துவந்தார்கள். அவர்கள் கும்பல் கும்பலாய்ப் பல ஆயிரம்பேர் அதிக ஆழமுள்ள கனிகளில் வேலைசெய்வதை நில மட்டத்திலிருந்து ஒருவன் பார்ப்பானேயாகில், அவர்கள் எல்லாம் எறும்புகள் மாதிரி தென்படுவார்கள். அதனால் அவர்களுக்குப் 'பொன் தோண்டி எறும்புகள்' என்று பெயர் அமைந்ததாக நூல்கள் கூறுகின்றன. சீனதேசத்துச் சரித்திரமும் இதற்குச் சான்று பகரும்.

ஆதலின், கி மு. 30,000லேயே தமிழ்நாடானது நாகரிகத்திலும், மொழி வளர்ச்சியிலும், கனித் தொழிலிலும் (Mining Industry), முத்துக் குளித்தலிலும் (Pearl Industry), அரசியலிலும் சிறந்து விளங்கிற்று என அறிகிறோம்.

ஆழிவடிபலம்ப நின்ற பாண்டியனைப் பற்றி நச்சி னார்க்கினியர் தொல்காப்பியப் பாயிர உரையில் 24,000 ஆண்டுகள் அரசு வீற்றிருந்ததாகக் கூறுவதாகப் பதிப்பித் துள்ளார்கள். "24,000 ஆண்டுகளின் முன் அரசாண்ட அப்பெயர்கொண்ட அரசனின் வழிவந்தவன்" ஆகக் கூறியதை, ஏட்டிலிருந்து படி எடுக்கும்போது தவறுதலாக எழுதி இருக்கவேண்டும்.

கி. மு. 16,000-ல் மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கம் இரீஇய திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் அடிக ளோடு இருந்த பொதியமலை அகத்தியர், பார்வதி கலியா ணச் சமயத்தில் கயிலையினின்றும் தென்னாடு போதும் போது,

'விடைகொடு போவான் ஒன்றை வேண்டினன் வகுத் தேயம்
தொடைபெறு தமிழ்நா டென்று சொல்லுப; அந்நாட்டின்
இடையபின் மனித்த ரெல்லாம் இன்தமிழ் ஆய்ந்து கேள்வி
உடையவர் என்ப; கேட்டார்க் குத்தரம் உரைத்தல் வேண்டும்''

என்று கூறியதை நோக்க, கி. மு. 16,000-க்கு முந்தியே தமிழ் நாட்டில் தமிழ் மொழியானது சீரும், சிறப்பும் எய்தி இருந்ததோடு மனிதர் எல்லாம் இன் தமிழ் ஆய்ந்து கேள்வி உடையவராய் இருந்தார் என்றும் அறிகிறோம்.

"மனித்தர் எல்லாம் இன்தமிழ் ஆய்ந்து கேள்வி உடையவர் என்ப" என்று அகத்தியர் பரமேசுவர னிடத்தில் கூறுவதால், இனிய தமிழை ஆராயப் பல சங்கங்கள் தமிழ் நாட்டில இருந்ததாகவும், அச்சங்கங்கள் மூலமாக எல்லா மனிதர்களும் நூல அறிவும கேள்வி அறிவும் பெற்றுச் சிறந்து விளங்கி இருந்தார்கள் என்றும் அறிகிறோம்.

ஆகலின், அகத்தியர் குறிப்பிட்ட சங்கங்கள் கி. மு. 16,000 க்கு முந்தினவைகளே ஆகும். அத்தகைய

சங்கங்களில் பஃறுளி யாற்றுத் தென்மதுரைத் தமிழ்ச் சங்கமும் ஒன்று எனத் தெரிகிறது.

* * *

இச் சங்கத்தைப்பற்றி, சுவாமி விபுலானந்தர் தாம் அரிதின் முயன்று வெளிப்படுத்திய யாழ்நூல் 31-ம் பக்கத்தில் கூறுவதாவது:—

“பழந்தமிழ் நாட்டுப் பஃறுளி ஆற்றங் கரைக்குச் செல்வோமாக மிகமிகப் பழையகாலம். முல்லைநிலம். மரங்கள் அடர்ந்த சோலையின் பாங்கர் ஒரு பசும் புற்றரை புற்றரையிலே, பசுக்களும் கன்றுகளும் மேய்கின்றன. கார்காலம். செடி கொடிகளின்மேல் பூக்கள் நிரம்பி இருக்கின்றன. இடையன் ஒருவன் வருகின்றான். காலிலே செருப்பு அணிந்திருக்கின்றான். உறுதியான உடல்; மயிரடர்ந்த தோட்கட்டு; பால்மணம் நாறுகின்ற தலை மயிர்; அரையிற் கட்டிய ஆடையின் ஒரு *தலைப்பினைத் தோளிற் போட்டிருக்கிறான். பல நிறமாகிய கோட்டுப் பூக்களையும் கொடிப் பூக்களையும் கலம்பகமாகத் தொடுத்த மாலை யொன்று தோளிற் கிடக்கிறது. இடுப்பிலே ஒரு மூங்கிற் குழல் செருகப்பட்டிருக்கிறது. ஒருகையிலே கோல்; மற்றொரு கையிலே வில்வடிவமான பொருள். ஒரு வில்லன்று; பல விற்கள் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கக் காண்கிறோம்.

நண்பகல் காலம் ஆகிறது. இடைச்சி ஒரு குடுவையிலே பாலிட்டுக் காய்ச்சிய கூழ் கொண்டுவருகிறாள். இடையன் கூழினை உண்டு நீர் அருந்துகிறான். பின்பு கையிலே குழலை எடுக்கிறான். சில நாட்களுக்கு முன் அம் மூங்கிற் குழல் இடையனால் இசைக்கருவி யாக்கப்பட்டது. தீக்கடை கோலினாலே, புகையெழுகச் கைம்முயன்று தீயைக் கடைந்துகொண்டு, அக்கடைகோலி லுள்ள தீயினாலே

மூங்கிலிலே துளையிட்டான். குழலிலே பாலைப்பண் வாசிக்கிறான். இடைச்சி கேட்டு மகிழ்கிறாள்.

அவள் போனபின்பு, வில்வடிவமான கருவியை எடுக்கிறான்; அந்த ஒரு வில்யாழ் அக்கருவியையும இடையன் தானே செய்துகொண்டான். உள்ளே துளையுடைய குமிழ மரக்கொம்புகளை வில்லாக வளைத்து, மரல் நாரினாலே திரித்த கயிற்றினை நாணாகக் கட்டி இருக்கிறான். ஒரே அளவான ஏழு விறகள் இருக்கின்றன. நாண்கள் மாத்திரம் தாழ்ததியும் உயர்ததியும் கட்டப்பட்டனவாய், அளவு வேறுபட்டிருக்கின்றன. இடையன நரம்புகளைத் தெறித்து இசை ஒப்புமையினை ஆராய்கிறான்.

மாலைக்காலம ஆய்விட்டது குழலிலே முல்லைப்பண் வாசித்துக்கொண்டு, பசுக்களையும் கன்றுகளையும் ஓட்டிக் கொண்டு தன் குடிசைக்குச் செலகிறான். உணவுக்குப்பின் தான் இசைகூட்டி வைத்த வில்யாழினை எடுத்து, இனிய குறிஞ்சிப்பண் வாசிக்கிறான். இடைச்சி கேட்டு மகிழ்கிறாள்.

இடையனுடைய வரன்முறை-நமது சொந்தக் கனவு அன்று தலைச்சங்கத்துக்கு முன நடந்த இந் நிகழ்ச்சியினைக் கடைச்சங்க காலத்துப புலவராகிய கடியலூா உருத்திரங் கண்ணனார் செவி வழியாகத் தெரிந்து, தாம தொண்டைமான் இளந்திரையனைப் பாடிய பெரும்பாணாற்றுப் படையினுள்ளே பொதிந்துவைத்துள்ளார். அவ்வாறு அவர் பொதிந்து வைத்துள்ள செய்யுட் பகுதியினைத் தருகின்றாம்:—

"தொடுதோல் மரீஇய வடுவாழ் நோனடி
விழுத்தண டூன்றிய மழுத்தின் வன்கை
உறிக்கா வூர்ந்த மறுப்பபடு மயிர்ச்சுவல்
மேம்பால் உரைத்த ஓரி ஓங்குமிசைக

கோட்டவும் கொடியவும் விரைஇக் காட்ட
பல்பூ மிடைந்த படலைக் கண்ணி
ஒன்றமா உடுக்கைக் கூழார் இடையன்
கன்றமர் நிரையொடு கானத் தல்கி
அந்நுண் அவிர்புகை கமழக் கைம்முயன்று
ஞெலிகோற் கொண்ட பெருவிறன் ஞெகிழிச்
செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்
இன்றீம் பாலை முனையிற் குமிழின்
புழற் கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்
வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சிப்
பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்
புல்லார் வியன்புலம் போகி.''

பல்காற் பறவை என்றது தேன்வண்டினை. இடையன் இசைத்த குறிஞ்சி இசையினைக் கேட்ட வண்டுகள், அவ் விசை தமது சுற்றத்தின் இசையெனக் கருதிச் செவி கொடுத்துக் கேட்டன என்று புலவர் கூறுகின்றார்.

வண்டின் இமிர்தல், சேய்மையில் உள்ளோர் செவிப் படாது அண்மையில் உள்ளோருக்கு மாத்திரம் புலப்படுதல் போல, வில்யாழின் இசையும் மெல்லென்ற முரற்சியாய் அண்மையிலுள்ளோருக்கு மாத்திரம் புலப்படுவது. இதற்குக் காரணம் என்னவெனில், உள்ளே துளையுடைய குமிழங் கொம்பு வில்யாழிலே பத்தர் ஆகவும், கோடாகவும் அமைந்துநின்றது. ஆதலின், ஒலி பல்குதற்கு இடமில்லாது போய்விட்டது. பத்தர் என்னும் உறுப்புத் தனியாக அமைந்து, அளவில் பெரிதாகுமிடத்து ஒலி பல்கும். முதலிலே வில்யாழிற்குப் பயன்பட்ட குமிழங் கொம்பு இனிய இசை பிறத்தற்கு இடமாயிருத்தலைக் கண்ட இசைக் கருவியாளர்கள், பத்தர் செய்தற்கு அம் மரமே தகுதி உடையதெனக் கொண்டார்கள். மரம் பருத்த பின்பு கொம்பிலே இயல்பாக அமைந்த உட்டுளை மறைந்துவிடும்.

இம்மரத்தினை வேண்டிய கணக்குக்குத் துண்டமாக அறுத்து எடுத்து, இலக்கணம் அமைந்த உருவாக்கி, உள்ளே குடைந்து வறுவாய் ஆக்கி, அவ் வறுவாயினைப் போர்வைத் தோலினால் மூடி, அதமேதால் இறுக்கும் வண்ணம் சுள்ளாணி களை முடுக்கிய பத்தரினை அமைத்துக்கொண்டார்கள். இவ் வாறு அமைந்த பத்தர், ஒலியினை நன்றாகப் பலகச்செய்த்து''

மேலே காட்டிய இவ்வரலாற்றால் கி. மு. 30,000 த்தி லேயே முத்தமிழும் எவ்வளவு சீர்பெற்று இருந்தன என் பதும், சாதாரணமான இடையனே இசைக்கருவி செய்ய வும், இசைபாடவும் வல்லனாயின் அக்காலத்து இசை வாணர்கள் எவ்வளவு நன்றாய்க் கற்றிருப்பார்கள் என்பதும் கொள்ளக்கிடக்கின்றன. முதலாம நிலந்தருதிருவிற் பாண்டியன் என்பவன் தன் நாட்டில் இசையினையும் ஏனைய இயல் நாடகத்தையும் செவ்வனே ஆய்ந்து வளர்த்துவந் தான் என்று கொள்ளக்கிடக்கின்றது.

பாண்டியர்களுடைய ஆதிக்கம் பெருவள நாட்டில் கி. மு 30,000 முதல் கி. மு. 16,500 வரை 13,500 ஆண்டுகள் நடைபெற்றது. பின் நிருதி நாட்டு (ஆப்பிரிக்கா) நிருதர்களால் (Negroes) தமிழ் நாடு கைப்பற்றப்பட்டு, 500 ஆண்டுகள் அல்லலில் மூழ்கி இருந்தது. இக்காலத் தைத் தான் திரிபுராதிகள் காலம் என்ப.

இனிச் சிலப்பதிகாரம் காடுகாண் காதையில் (18 அடி முதல் 22 அடி வரை உள்ள)

''வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள

வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி''

என்ற வரிகளில் கூறப்பட்டுள்ள நிலந்தரு திருவிற் பாண்டியனும்,

## கலித்தொகை-104

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வவ்வலின
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்பட
புலியொடு வில் நீக்கிப புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்''

என்னும் பாடலில் கூறப்பட்டுள்ள நிலந்தரு திருவிற் பாண்டியனும், ஆழிவடிம்பலம்ப நின்ற பாண்டியனே என்று ஐயுறுவார் பலர். அதனைச் சிறிது ஈண்டு விளக்குவாம்:—

வடிவேல் எறிந்த வான் பகை பொறாது, பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக் கோடும் கொடுங் கடல் கொள்ள, கொண்டபின், கடலகொண்ட நாட்டுக்கு ஈடுசெய்ய, வடதிசைசென்று கங்கைநதி பாயும் நாட்டை யும், இமயமலை நாட்டையும் பெற்றுத் தன்னரசுக்கு உட்படுத்தித் தென்றிசையையும் ஆண்ட தென்னவன் இரண்டாம் நிலந்தருதிருவிற் பாண்டியன் ஆவான். என்னெனின், குன்றம எறிந்த குமரவேள் சூரபன்மனோடு பொருது, வடிவேல் எறிந்த ஞான்றுதான் பஃறுளியாற்று டன் பன்மலை அடுக்கத்து மேருமலையையும், குமரிக் கோட் டையும், கொடுங்கடல் விழுங்கியது.

குமரவேள் வடிவேல் எறிந்து சூரனை வென்றது கி. மு 14,058 ல் ஆகும். ஆதலின், கி. மு. 30,000 ல் இருந்த முதலாம் நிலந்தரு திருவிற் பாண்டியனுக்கும், கங்கைநதி பாயும் நாட்டையும் இமயத்தையும் கொண்ட

இரண்டாம் நிலந்தரு திருவிற் பாண்டியனுக்கும், 15,942 ஆண்டுகள் இடையில் உள்ளன.

இனி, மேலே கூறிய "மலிதிரை ஊர்ந்து" என்ற கலித்தொகைச் செய்யுட்கு, "அங்ஙனமாகிய நிலக் குறைக்குச் சோழநாட்டிலே முத்தூர்க் கூற்றமும், சேர நாட்டிலே குண்டூர்க் கூற்றமும் என்னும் இவற்றை இழந்த நாட்டிற்காக ஆண்ட தென்னவன்" என்று கூறிய உரையாசிரியர் கூற்றை நோக்க, ஈண்டுக் கூறப்பட்ட பாண்டியன் வடதிசைக் கங்கையும் இமயமுங்கொண்ட நிலந்தரு திருவிற் பாண்டியன் வழிவந்த அப் பெயர் கொண்ட பாண்டியன் என்று அறிகின்றோம். இவனை நான்காம் நிலந்தரு திருவிற் பாண்டியன் என்று கூறுப.

அதங்கோட்டாசான் முன்னிலையில் தோல்காப்பியம் புலப்படுத்தவன் மூன்றாம் நிலந்தரு திருவிற் பாண்டியன் ஆவான்.

கலித்தொகை 104-வது செய்யுளால் குறிக்கப்பட்ட கடல்கோள் மிகச் சிறியது. குண்டூர—முத்தூர்க் கூற்றங்களின் அளவே கடலாற் கொள்ளப்பட்டது ஆகும்.

ஆனால், "வடிவேல் எறிந்த..." என்ற சிலப்பதிகார அடிகளால் குறிக்கப்பட்ட கடல்கோளோ மிகப் பெரியது. அதனால் கொள்ளப்பட்ட தமிழ் நாடு கங்கை பாயும் நாடும், இமயமலை நாடும் சேர்ந்த பரப்பையுடைய அளவாகும்.

ஆதலின், இந்நால்வரையும் ஒன்றுபடுத்திக் கூறும் கூற்றுப் பொருந்தாது. இந்நால்வரும் வெவ்வேறு காலத்தவர் ஆவார்கள். ஆனால் ஒரே குடியில் வந்தவர்கள்

## II மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கம்

### (உருவ எழுத்துக் காலம்)

(1) காலம்:—கி. மு. 16,000 முதல் கி. மு. 14,550 வரை 1450 ஆண்டுகள்.

(2) இடம்:—குமரிக் கண்டத்து, குமரிநாட்டு, ஏழ் குன்ற நாட்டின் மகேந்திர மலை.

(3) சங்கம் இரீஇய அரசர்:—இறையனார் என்னும் திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் அடிகள். இவருக்கு மேருவரம்பன்—பரமேச்சுரன் என்ற பட்டப் பெயர்கள் உண்டு.

(4) புலவர்:—

(1) திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான அடிகள் என்ற இறையனார.

(2) பொதியமலை அகத்தியர் I. முதலியோர்.

(5) நூல்:—(1) மகேச சூத்திரம் என்னும பேரிலக்கணம்

(2) களவியல் எனனும் ஐந்திணை அகநூல.

(6) பாடப்பட்டன:—

(1) அறம்—பொருள்—இன்பம்—வீடு என்னும் நான்மறைகள்.

(2) ஆகமங்கள் ஒன்பது

(3) அங்க நூல்கள் ஆறு.

(4) ஒழுக்க நூல்கள் பதினெட்டு.

(5) மகேச சூத்திரம்.

(6) களவியல் என்னும் ஐந்திணை அகநூல் முதலியன.

(7) பாடப்பட்டோர்:—திரிபுரம் எரிதத விரிசடைப் பெருமான் அடிகள் என்ற இறையனார்.

(8) கவி அரங்கேறிய அரசர்:—

திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான்.

(9) வரலாறு:—திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் காலத்தில் இருந்த தமிழ்நாட்டின் பரப்பை முதலில அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாதது.

விந்தியமலைக்கு வடக்கே இருந்த தமிழ்நாடானது சிந்து நாடு-கங்கை நாடு-இமய நாடு என்று மூன்று பெரும் பிரிவுகளாகவும,

விந்திய மலைக்கும் குமரி ஆற்றுக்கும் இடையில் உள்ள தமிழ் நாடானது துண்டீரநாடு—எருமை நாடு—குறும்பர் நாடு—கோங்கர் நாடு—மழவர் நாடு—சோழநாடு—பாண்டிய நாடு—சேர நாடு என எட்டுப் பிரிவுகளாகவும்,

குமரியாற்றுக்கும் கனனி யாறறுக்கும் இடையில் இருந்த தமிழ் நாடானது குமரி நாடு—பெருவள நாடு—ஒளிநாடு (தென்பாலிமுகம்) என மூன்று பெரும் பிரிவுக ளாகவும பிரிக்கப்பட்டிருந்தன.

மேலே கூறப்பட்ட ஒவ்வொரு நாடும் பல சிறு கூற் றங்களாகவும் பகுக்கப்பட்டிருந்தது அவைகளில குமரி நாடானது:—

(1) ஏழ் மதுரை நாடு (2) ஏழ் தெங்க நாடு
(3) ஏழ் குறும்பனை நாடு (4) ஏழ் முன்பாலை நாடு
(5) ஏழ் பினபாலைநாடு (6) ஏழ் குன்ற நாடு
(7) ஏழ் குணகாரைநாடு

என்று 49 சிறு நாடுகளாகப் பகுக்கப்பட்டு இருந்தது.

இரண்டு கோடி ஆண்டுகளுக்குமுன் விந்திய மலைக்கும் வானவா நாடடிறதும் (Tibet) இடையில் கடல் இருந் தது. அந்த இடததில் இமயமலை கி. மு. 20,000,000ல்

தான் தோன்றியது என்று ஞாலநூல் வல்லார் கணக்கிட்டுக் கூறுகிறார்கள்.

இமயமலை மேலே எழுந்து பல ஆயிர ஆண்டுகளுக்குப்பின், குடிஇருக்க வசதிகள் ஏற்பட்ட பின, ஒளியர்களும், சேர—சோழ—பாண்டியர்களும் மாறி மாறி இமயம் சென்று, அந்த நாட்டில் மககளைக் குடியேற்றி, நாட்டை வளம்படுத்தினார்கள. அப்போது, சிந்து, பிரமபுத்திரா என்ற இரண்டு ஆறுகளுமே ஓடிக்கொண்டு இருந்தன. இவை யிரண்டும் இயற்கை யாறுகள். கங்கையாறு செயற்கை ஆறு—சோழர்களால் வெட்டப்பட்ட ஆறு.

புதிதாய் ஏற்பட்ட வடநாடானது சோழர் ஆட்சிககு உட்பட்டு இருந்த ஞான்று, "ஆறு தோண்டாத அரசன் அரசனல்லன்" என்ற பழமொழிககு இணங்க, அழகுநந்தன் என்ற சோழ அரசன தன் பெயரால (Aleknanda) என்ற ஓா ஆற்றை முதன்முதல வெட்டினன. அவனுடைய பரமபரையில் வந்த சோழன் பஃறோச்செம்பியன் (பகுரதன்—பகிரதன்) கங்கை ஆற்றை வெட்டினன. அலெக்நந்தா என்பது இப்போது கங்கையாற்றின் கிளையாறாய இருககிறது. இந்தச சோழனால நாடு வளம் பெறறது

பஃறோர்ச செம்பியனுடைய மூனறாம் பாட்டனாகிய சகரன் என்பவனதான் தொடுகடலாகிய வங்காளக குடாக் கடலைத தோண்டினன. இதைக குறிததுத தொலகாபபியம்-பொருள் - உரையில, "சகரா வேள்விக் குதிரை நாடித் தோட்ட கடலகத்துப்பட்டுக் குமரியாறு பனை நாட்டோடு கெடுவதறகு முன்பு" என்று கூறப்பட்டுள்ளது காண்க.

வங்காளக குடாககடலுக்கு இதனாலே தொடுகடல் என்றும், சாகரம் என்றும் காரணப் பெயர்கள் ஏற பட்டன சகரனாலே தோணடப்பட்டது சாகரம் இப

போது சாகரம் என்னும் பெயர் எல்லா சமுத்திரங்களுக்கும் பொதுவாக இட்டு வழங்கப்படுகிறது.

இனி, பெருவளநாட்டைப் பற்றியும், ஒளிநாட்டைப் பற்றியும் சிறிது தெரிந்துகொள்ள வேண்டியது முக்கியமானது.

உலகத்தின் நடுவரையும் (Equator), அச்சவரையும் (Axis) சேரும் இடத்திலேதான் மேருமலை இருந்தது. அது தெற்கே 2½° பாகை வரையும் நீண்டு, உயர்ந்து, பல சிகரங்களை உடையதாய் இருந்தது. இமயமலைக்கு இப்போது 13-கொடுமுடிகள் இருப்பது போல, மேருமலைக்கு 49-கொடுமுடிகள் இருந்தன. **மகேந்திரம்—மணிமலை—குமரி — கொல்லம்** முதலியன, 49-கொடுமுடிகளில் முக்கியமானவை.

இம்மேருமலைத் தொடரினின்றுமே **குமரியாறு—பேராறு—பஃறுளியாறு—கன்னியாறு** முதலிய ஆறுகள் தோன்றித் தெற்கு முகமாக ஓடி, குமரிநாடு—பெருவளநாடு—ஒளிநாடுகளை வளம்படுத்தின.

8°-பாகையிலிருந்து 2°-பாகை வரையுமே **குமரிநாடு**. எட்டியிருந்த குமரிநாட்டின் தென்பாகம் ஏழ்குணகாரை நாடு ஆகும்.

ஏழ்குணகாரை நாட்டிலிருந்து 23½° பாகைவரை, அஃதாவது, **தென் அயனவரை** வரையும் **பெருவளநாடு** பரவி இருந்தது.

குமரியாறு குமரிநாட்டிலும், **பேராறும் பஃறுளியாறும்** பெருவளநாட்டிலும் ஓடிக்கொண்டிருந்தன.

23½° பாகையிலிருந்து, அஃதாவது, தென் அயனவரையிலிருந்து, தென்சமுத்திரம் (Antarctic) வரை

ஒளிநாடு பரசி இருந்தது. கன்னியாறு ஒளிநாட்டில் ஓடிக் கொண்டிருந்தது. இது தமிழ் நாட்டின் கடைசி ஆறு ஆனதால் திருமூலர் "ஈறான கன்னி" என்றார்.

தென் அயனவரை (Tropic of Capricorn) தாண்டிச் சூரியனுடைய ஓட்டம் இன்மையால், ஒளிநாடு ஒளிமேகங்களால் (Aurora Borialis) தான் வெளிச்சத்தைப் பெற்று வந்தது.

ஒளிநாட்டில் உள்ளவர்களுக்கு நாளானது உலகத்தின் நடுவரைப் பக்கம் உள்ளவர்களுடைய நாள் போன்றதன்று.

மிக நீடித்தது. ஆறுமாதம் பகலும், ஆறுமாதம் இரவும் ஆக இருக்கும். நடுவரைப் பக்கம் உள்ளவர்களுடைய ஆண்டு ஒன்று, ஒளிநாட்டார்க்கு ஒரு நாள் ஆகும்.

"ஒளியராவார் பிறமண்டலங்களை அரசாளுதற்கு உரிய வேளாளர்" என்று கலித்தொகை உரையில் நச்சினார்க்கினியர் கூறுதலால் அறியலாம். ஒளிநாட்டு வேளாளர்க்கு இடபக்கொடி உரித்து. அவர்கள் மூன்று கண்களை உடையவர்கள். மூன்று காலங்களையும் உணரும் ஆற்றல் வாய்ந்தவர்கள். மாயா மலம் இல்லாதவர்கள்.

(1) இப்போது ஜப்பான் நாட்டில் அரசனையே தெய்வமாக வணங்குவதுபோல, அக்காலத்தில் தமிழ்நாட்டில் அரசனையே தெய்வமாக வணங்கி வந்தார்கள். கிரீஸ் தேசத்து ஓமர் என்னும் கவி எழுதிய நூலிலும், ஓம்ஸ்வாத் எழுதிய சரித்திர நூலிலும் மேற்கூறிய விவரங்களைக் காணலாம்.

(1) இரண்டாவது உலக யுத்தத்துக்கு அப்புறம், இரோஷிமா, நாகசாகி நகரங்கள் அணுகுண்டினால் நாசமாக்கப்பட்ட பின், ஜப்பான் அமெரிக்காவிடம் சரணாகதி யடைந்தது.

ஆழிவடிப்பலம்ப நின்ற பாண்டியன் காலமாகிய கி. மு. 30,000-க்கு முந்தியே ஒளியரில் ஒரு பிரிவார் ஒளிநாட்டினின்றும் வடக்கே இமயம் சென்று, கயிலையை (2) அரச இருக்கையாகக்கொண்டு, வடநாடு முழுதும் ஆட்சி புரிந்துவநதார்கள்.

மறைஞ்சதரை (Mohenjo Daro), அரப்பா (Harappa) நாகரீகங்கள் எலலாம் அக்காலத்தில் ஏற்பட்டவையே.

ஒளியரில் ஒரு பிரிவார் வடக்கே செல்லுவதறகு முந்தியே சேர—சோழ—பாண்டியர்கள மாறி மாறி அவ் வடநாட்டை ஆட்சிபுரிநதுவந்தார்கள்.

கி. மு. 30,000-ல நெடியோன என்னும் பாண்டியன் குமரிநாடு — பெருவளநாடு — ஒளிநாடு முதலியவைகளைக் கைபபற்றி, பஃறுளி என்னும் ஆற்றை வெட்டி, நாட்டை வளம்படுதகி, ஆட்சி புரிந்துவந்தான். நெடியோன் முதல் அவன் பரம்பரையார் ஆட்சி குமரிக்கண்டத்தில 13,500 ஆண்டுகள் நடைபெற்றது.

கி. மு 16.500-ல் பாணடியர்களுடைய ஆட்சி பெருவளநாட்டில் குன றவே, நிருதி நாட்டு (Africa) நிருதர்கள் (Black Negroes) குமரிககண்டததைக கைப்பற்றி, பாண்டியாகளையும் சேர—சோழர்களையும்—ஒளியர்களையும் அடககி ஆண்டுவந்தார்கள்.

சேர—சோழ—பாண்டியர்களால் நிருதர்களை ஒழிக்க முடியவிலலை. நிருதர்கள் பொன - வெள்ளி - இரும்பு முதலிய உலோகங்களால் மூன்று பெரும் கோட்டைகளைக் கட்டிககொண்டு, முப்புரத்தவர் எனப் பெயர் பெற்று, தமிழ்நாட்டை 500 ஆண்டுகள் ஆண்டு வந்தார்கள்.

---

(2) இமயத்தின் 13-கொடுமுடிகளில் ஒன்று.

கிருதர் பரம்பரையில் கடைசியாக அரசாண்டவர்கள் திரிபுராதிகள் என்று கூறப்படுவாரான உடுக்கண்ணன் (தாரகாக்கன்), மரைக்கண்ணன் (கமலாக்கன), அறிவுடைமாலி (வித்யுன்மாலி) என்பவர் ஆவர்

தங்களால வெற்றிபெற முடியாமை கண்டு, தமிழ் நாட்டு அரசர்கள் எல்லாம், கயிலை சென்று, பரமேச்சுரனிடம் முறையிட, அவர் தனக்குச் சமானமான அகத்தியரைச் சேனைகளுடன் அனுப்பினார். அகத்தியர் புறப்படுமுன் பரமேசுரனிடம் தமிழ் இலக்கிய இலக்கணங்களை எல்லாம் கற்றுக்கொண்டு புறப்பட்டார் "விடைகோடு போவான் ஒன்றை......" என்ற பாசுரத்தில் இச்சரிதம் கூறப்பட்டிருக்கல் காண்க.

அகத்தியர் சேனைகளுடன் புறப்பட்டுக் கயிலையினின்றும் வருவதை அறிந்து, முப்புரத்தவர் தங்கள் சேனைகளையும் வரும் சேனைகளை எதிர்க்க அனுப்பினார்கள். இருவர் சேனைகளும் விந்தியமலையில் கைகலந்தன. அந்தப் போரில அகத்தியரே வெற்றிபெற்றார். அதனானே அகத்தியருக்கு "விந்தம் அடக்கிய வித்தகர்" எனப் பெயரும் வாய்த்தது

பிறகு, அகத்தியர் கிருதர் சேனைகளை எதிர்த்து, கிரவுஞ்சம் முதலிய பல சண்டைகளில் வெற்றி பெற்றார். கிரவுஞ்சகிரிச் சண்டையைப்பற்றிக் கந்த புராணம், தாரகன வதைப் படலம், 3-ம் செய்யுளில குறிக்கப்பட்டு உள்ளது. கடைசியாக அகத்தியர் பொதியமலை வரையும் சென்று நாட்டைக் கைப்பற்றித் தமிழர் ஆட்சியை நிறுவினார் அதற்கப்புறம் போகமுடியாமல், அகத்தியர் பொதிய மலையிலேயே தங்கிவிட்டார்

பின், சின்னாட்களுக்கெல்லாம், பரமேசுரன் பெரும் சேனைகளுடன கயிலையினின்றும் திரிபுரம் நோக்கி வருவது

கேட்டு, அகத்தியர் பொதியமலையினின்றும் எதிர்கொண்டு சென்று, திருவேற்காடு என்னும் இடத்தில் பரமேச்சுரனைச் சந்தித்து, போர் நிலையினைப்பற்றிப் பேசினார்.

பின் கூவம் சென்று, ஆங்கு, பரமேசுரன் போரினைத் தானே தலைமை தாங்கி நடாத்துதற்கு விற்கோலம் புனைந்து, தேர் ஏறி, தெற்கு நோக்கிச்சென்றார். கூவம் என்னும் திருவிடத்திற்கு இன்றும் திருவிற் கோலம் என்னும் பெயர் அமைந்திருப்பதானது இவ்வரலாற்றை நினைவு உறுத்துகிறது.

பரமேசுரன் சேனைகளுடன் திரு அச்சிறுபாக்கம் என்னும் இடத்தை அடைந்த போழ்து, தேரின் அச்சு முறிய, ஆங்கு நின்று, தேரினைச் சரிப்படுத்திக்கொண்டு, சேனைகள் புடைசூழச் செல்லும் அளவில், திரிபுராதிகள் சேனைகள் திருவதிகை என்னும் இடத்தில் பரமேசுரன் சேனைகளை எதிர்க்க, இரு சேனைகளும் கை கலந்தன. அங்கே நடந்த மும்முரமான போரில் பரமேசுரன் வெற்றி பெற்று, தெற்கே முப்புரம் வரையும் சென்று, போரிட்டு, மூன்று பெரும் கோட்டைகளையும் தகர்த்து எரியூட்டி, நாசம் செய்து, நாட்டைத் திரிபுராதிகள் கையினின்றும் மீட்டார். தோல்வியுற்ற மூன்று நிருதர்களும் சரணம் அடைய அவர்களுக்குப் பரமேசுரன் அபயம் நல்கி, மகேந்திரமலையை அரச இருக்கையாகச் செய்து, வளம் பெருக நாட்டை ஆண்டு வந்தார்.

அப்போது தான் மகேந்திர மலையில் தமிழ்ச் சங்கம் ஒன்று நிறீஇ, மகேச சூத்திரம், களவியல் என்னும் நூல்களை யாத்து, அகத்தியர் முதலிய பல புலவர்களைச் சேர்த்து, முத்தமிழையும் வளர்த்துவந்தார்.

அத்தமிழ்க் கழகத்தில் தான் பரமேசுவரனுக்கு மேரு மலை நாட்டை திருத்தி ஆட்சியினின்றும் மீட்டதால் "மேருவரம்பன்" என்று பட்டத்தையும், திரிபுரங்களை எரித்ததால் "திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான்" என்று பட்டத்தையும் வழங்கினார்கள். அவருடைய இயற் பெயர் இறையனார். ஆதலின், அவர் செய்த களவியல் என்னும் நூல் "இறையனார் களவியல்" என்னும் பெயரைப் பெற்றது.

திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் கயிலையில் இருந்த பொழுது, ஆலின்கீழ் ஒரு நால்வருக்கு உரைத்த அறம் முதல் நான்கு மறைகளையும், காரணம் முதல் ஒன்பது ஆகமங்களையும், மறையங்க நூல்கள் ஆறினையும், ஒழுக்க நூல்கள் பதினெட்டினையும் மகேந்திர மலையில் மறுபடியும் பெருவளநாடு முதலிய ஏனைய நாடுகள் உய்யும் பொருட்டு வெளியிட்டு அருளினார். இந்த நிகழ்ச்சியைத் தான்

'மன்னு மாமலை மகேந்திர மதனிற்சொன்ன
சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்"
என்று மாணிக்கவாசகர் கூறலானார்

அப்பர் சுவாமிகளும் 'அறம் பொருள் இன்பம் வீடு ஆறங்க வேதம் தெரித்தானை" என்று பாடியுள்ளார்.

இப்பண்டைய நான் மறைகளைக் குறித்து ஆரியர் நூற் களிலும் கூறப்பட்டு இருப்பதைக் காண்க:—

ஐதரேய பிராமணம் என்னும் ஆரியர் நூலில், 7-18 சுலோகங்களில் "விசுவாமித்திர மரபினரான காதினாக்கு ஆரிய வேதங்களின் வேறான, தெய்வத்தன்மை பொருந்திய வேறு வேதங்கள் இருந்தன," என்று கூறப்பட்டுள்ளது.

இவ் விசுவாமித்திர மரபினராகக் கூறிய தெய்வீக வேதமே அறம் - பொருள் - இன்பம் - வீடு எனனும் நாற் பொருள் இயல்புகளையும், சிவபிரானையும், அவன் முனைந்து விளங்கும் முத்தி வழிபாடுகளையும் உணர்த்தும் பண்டைத் தமிழ் நான்மறை ஆதலும் தானே பெறப்படும். என்று "மாணிக்க வாசகர் காலம்" என்ற நூலில் 521-ம் பக்கத்தில் கூறப்பட்டுள்ளது காண்க.

விசுவாமித்திர மரபினர் தமிழ் அரச வகுப்பினர் ஆவர் வடநாட்டில 'பாஞ்சாலம்' என்று கூறப்படும் ஒரு பகுதியை ஆண்டவர் ஆவர் ஆரியர்கள் கங்கை நதி பாயும் நாட்டைக் கவர்ந்தபோது, ஆரிய மதத்தைத் தழுவிக்கொண்டு. ஆரியரோடு சேர்ந்து கொண்டவர் விசுவாமித்திர மரபினர்.

மருணீக்கியார் என்ற அப்பர் சுவாமிகள் சைவத்தினின்றும் சமண் மதம் தழுவியபோது, சிறப்புச் செய்யப் பெற்று, அம்மதத்துக்கு முதல் முனிவர் என்ற குறிப்பைக் காட்டும் "தருமசேனர்" எனனும் பட்டத்தை அடைந்தது போல, விசுவாமித்திரரும் ஆரிய மதத்தைத்தழுவிய ஞான்று அம்மதத்தில் அவர் "பிரமரிஷி" என்ற பட்டத்தைப் பெற்றார் என்று அறிகிறோம்.

ஆதலின், மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழ் நான்மறைகளும், தமிழ் ஒன்பது ஆகமங்களும், தமிழ் ஆறு அங்க நூலகளும், இனனும் பல நூல்களும் வெளியிடப் பட்டன என்று தெரிகிறது.

தொல்காப்பியப் பாயிர உரையில், நச்சினார்க்கினியர் "நான்கு கூறுமாய், மறைந்த பொருளுமாய் உடைமையால் நான்மறை என்றார். அவை தயித்திரியமும்—பவுடிகமும்—தலவகாரமும்—சாமமுமாம். இனி, இருக்கு, யசுர்

வும், சாமமும், அதர்வணமும் என்பாருமுளர். அது பொருந்தாது, இவர் இந்நூல் செய்த பின்னர் வேதவியாசர் சில் வாழ்நாட் சிற்றறிவினோர் உணர்தற்கு நான்கு கூறுகச் செய்தார் ஆதலின்.''

என்று கூறுவதால தமிழ் வேதங்கள வேறு, ஆரிய வேதங்கள் வேறு எனபது பெறறும்.

மேலும், இமமகேந்திரமலைத் தமிழ்ச சங்கமானது, ஆரியாகள இந்நாட்டிற்கு வருவதறகு 7,000 ஆண்டுகள் முன்னமே நிறுவபபட்டது. ஆதலால், அச்சங்கத்தில வெளியிடப்பட்ட வேத ஆகமங்கள் எல்லாம தமிழாகவே இருந்தன.

---

# III

## பொதியமலைத் தமிழ்ச் சங்கம்

இச் சங்கம் உருவ எழுத்துக் காலத்தில் ஆரம்பிக்கப் பட்டு, கோல எழுத்து, வட்ட எழுத்து, சதுர எழுத்துக் காலம் வரை நடைபெற்றது.

1. காலம்:—16,000 BC to......
2. இடம்:—பொதியமலை—பாவநாசம
3. சங்கம் இரீஇயவர்:—பொதியமலை அகத்தியர் I. திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமானுக்குச் சமான மானவர். பரமேசுவரருடைய ஐம்பெருங் குழுவில் தலைமை தாங்கியவர்.
4. புலவர்:—பொதிகை மலை அகத்தியர் I, அவர் மாணாக்கர் பலர்; பாண்டிய அரசர்களில் பலர், (இப் பொதியமலை அகத்தியர் மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கத்திலும் அங்கத்தினராய் இருந்தார்.)
5. நூல்:—மகேச சூத்திரம்—களவியல்—அகத்தியம்.
6 பாடப்பட்டன:—அகத்தியம் முதலியன.
7. பாடப்பட்டோர்:—திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் அடிகள் என்கிற இறையனார்
8. கவி அரங்கேறியவர்:—பொதியமலை அகத்தியர் I.
9. வரலாறு:—திரிபுராதிகளுடைய கொடுங்கோன்மைக்கு அஞ்சி, தமிழ்நாட்டு அரசர்களும், தமிழ்க் குடிகளும் கயிலை சென்று, இறையனாரிடம் முறையிட. அவர் தம்முடைய உற்ற நண்பரும், ஐம்பெருங் குழுவின் அங்கத்தினரு மான அகத்தியரை விளித்து, சில சேனைகளுடன் அனுப்பி, நிருதர்களை அடக்கும்படி ஏவ, அவரும் நிருதர்களுடன் விந்தம்—கிர

வஞ்சம் *முதலிய இடங்களில் மலைந்து, சண்டை செய்து வெற்றிபெற்று, பொதிகை மலை வரை சென்று, நாட்டை மீட்டுச் சீர்ப் படுத்தினார்.

பொதிகைக்குத் தென்பால் அவரால் போக முடிய வில்லை. அதனாலே தான் நிலையாகப் பொதிகையிலேயே பாசறை அமைத்துக் கொண்டு, பரமேசுரன் வருமளவும் நாட்டை ஆண்டு வந்தார். பரமேசுரன் அகத்தியரை அனுப்பிய செய்தியை,

“ நடுவு நிலாது இவ்வுலகம் சரிந்து
கெடுகின்ற தெம்பெருமானென்ன, ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீ போய்
முடுக்கிய வையத்து முன்னிரென் றானே ”

என்று தமிழ் மூவாயிரச் செய்யுளால் அறியலாம்.

நாடு வளம் பெறுதற்கு முதலில் மொழி வளம்பெற வேண்டுமெனக் கருதி, பொதிகையில் ஒரு தமிழ்ச் சங்கம் நிறீஇ, அகத்தியம் என்னும் பேரிலக்கண நூலை யாத்து, முத்தமிழையும் ஆய்ந்து வளர்த்து வந்தார்.

பின், பரமேசுரன் சேனைகளுடன் கயிலையினின்றும் வருவதைக் கேள்விப்பட்டு, எதிர்சென்று, திருவேற்காடு என்னும் இடத்தில் சந்தித்துப் பின், கூவம் சென்று, திரிபுர நிருதர்களை வெல்லக்கூடிய வழிகளையெல்லாம் தீர்மானித்த பின், இருவரும் புறப்பட்டு, போர்க் கோலத் துடன் செல்ல, திருவதிகையில் நிருதர்கள் கி. மு. 16,000-ம் ஆண்டில் எதிர்க்க, அங்கு நடந்த சண்டையில் வெற்றிபெற்று, முப்புரத்தை நோக்கிச் சென்று, முப்புரத் தையும் தீக் கொளுவி, சரண் அடைந்த முப்புரத்து அரசர் களுக்கும் அபயம் நல்கி, நாட்டைத் தமிழர் ஆட்சிக்குக் கொண்டுவந்தார்கள். இதனை:—

"மூவெயில் செற்ற ஞான்று உய்ந்த
மூவரில் இருவர்நின் திருக்கோயிலின் வாய்தல்
காவ லாளர்கள் எனஏவிய பின்னை
ஒருவன் நீஎரி காட்டர ங்காக
மானை நோக்கியோர் மாநட மகிழ
மணிமு ழாமுழக் கஅருள் செய்த
தேவ தேவநின் திருவடி அடைந்தேன்
செழும்பொ ழில்திருப் புன்கூ ருளானே"

என்ற சுந்தரர் தேவாரத்தால் அறியலாம்

இருவர்:—உடுக்கண்ணன் (தாரகாக்கன்)
மரைக்கண்ணன் (கமலாக்கன்)

ஒருவன்:—அறிவுடைமாலி (வித்யுன்மாலி)

திரிபுர நிருதர்களிடமிருந்து நாட்டை மீட்டபின், நாட்டில் அமைதி ஏற்பட்டதால், பரமேச்சுரன் மகேந்திர மலையை அரச இருக்கையாக்கி, நாட்டைத் தாமே ஆண்டு வந்தார். அப்போதுதான் அவர் மகேந்திர மலையில் ஓர் தமிழ்ச் சங்கம் இரீஇ, மகேச சூத்திரம் எனனும் பெரிய ஐவகை இலக்கண நூலையும் யாத்து, பொதியமலை அகத்தியரையும் அதில் அங்கத்தினராக இருக்கச் செய்து முத்தமிழையும் ஆய்ந்து வந்தார்

அகத்தியர் மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கத்தில் அங்கத்தினராய் இருந்த போதிலும், பொதியமலையில் தாம் நிறீஇய தமிழ்ச் சங்கத்தையும் வளர்த்து வந்தார். சேர—சோழ—பாண்டிய அரசர்களும், அரச குடும்பத்தாரும், அந்நாடுகளில் உள்ள ஏனைய அறிஞர்களும் அப் பொதிகை மலைத் தமிழ்ச் சங்கத்தில் சேர்ந்து, தமிழ் மொழியை வளர்த்து வந்தார்கள் மூன்று நாடுகளுக்கும் பொதுவான மலையானதால் அம்மலைக்குப் பொது + இல் = பொதியில் என்றும் அம்மலையில் ஏற்படுத்தப்பட்ட சங்கத்துக்கு

பொதிய மலைத் தமிழ்ச சங்கம் என்றும் பெயர்கள் உண்டாயின.

இச சங்கமானது திரிபுராதிகள் காலமாகிய கி மு. 16,000 ல் ஆரம்பிக்கப்பட்டு, சூரபன்மன் காலத்திலும் இராம—இராவணர் காலத்திலும, பாரத காலத்திலும், அதற்குப் பிற்பட்டுச் சில காலங்களிலும் நடந்து வந்ததாக இதிகாசங்களாலும், புராணங்களாலும், கல்வெட்டுக்களாலும், சாசனங்களாலும் அறிகிறோம்.

தலை—இடை—கடைச சங்கங்கள் வேறு, இச்சங்கம் வேறு

கம்ப ராமாயணம் நாட விட்ட படலத்தில்,

"தென் தமிழ் நாட்டகன் பொதியில்
திருமுனிவன் தமிழ்ச் சங்கம் சோகிறபீரேல்"

என்று கூறப்பட்டுள்ளதை நோக்க, இராமாயண காலத்தில் கபாடபுரத்தில் இடைச சங்கம் நடைபெற்று வந்த போழ்தே, பொதியமலையில அகத்தியர் சீடர் பரமபரையில வந்து, அகத்தியர் பெயர் கொண்ட ஒருவரால தமிழ்சசஙகம் நடைபெறறு வநத வரலாறும, அச்சங்கத்தின புகழானது வடநாட்டிலும பரவி இருநததெனறும அறிகிறோம்.

வான்மீகி இராமாயணத்தில பொதிகைமலை அகத்தியரைப் பற்றியும, அவர் நிறீஇய தமிழ்ச சங்கத்தைப பற்றியும் கூறப்பட்டுள்ளது. அது வருமாறு.—

வானமீகம, ஆரணியகாணடம 11-12 சுலோகங்களில் விநதிய மலைக்குத தெனபால் பஞசவடியை அடுத்து (Nasik) இருநத ஓர அகத்தியர் ஆசிரமத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

வானமீகம—கிட கிந்தாகாண்டம் 15-16 சுலோகங்களில், தென கடல ஓரத்தில மலைய மலையில (பொதிகை

மலை) உச்சியிலே ஆதித்தனுக்குச் சமானமான மிகுந்த ஒளி யையுடைய முனிசிரேட்டரான அகத்தியர் இருக்கிறார் என்று கூறப்பட்டுள்ளது.

இன்னும் அந்த வான்மீகத்திலேயே, கோசல நாட்டில் வேத சுருதி என்ற கங்கையின் உபநதிக் கரையில் ஒரு அகத்தியர் ஆசிரமம் இயற்றித் தவம் புரிந்து வந்ததாகவும்,

இலங்கைத் தீவின் தெற்கேயுள்ள குஞ்சரமலையில் ஒரு அகத்தியர் ஆசிரமம் அமைத்துத் தவம் இயற்றி வந்ததாக வும் கூறப்பட்டுள்ளது.

ஆதலின், அகத்தியர் என்னும் பெயர்கொண்ட முனி வர்களும், அறிஞர்களும் பழங்காலத்தில் இருந்தனர் என்றும், அதற்குப் பிற்காலத்திலும் அப் பெயர் கொண்ட வர் பலர் இருந்தனர் என்றும் அறிகிறோம்.

தமிழ்நாட்டைச் சேர்ந்த எருமை நாட்டிற்கு அரச னாகிய சுக்ரீவன் தன் வானர வீரர்களுக்கு, "மலய மலை யில் அகத்தியருடைய தமிழ்ச் சங்கம் இருக்கிறது. அங்கே சென்றால், அகத்தமிழ் மயக்கத்தால் அங்கேயே நின்று விடு வீர்கள். ஆதலால், அங்குச் செல்லாது, விலகி மகேந் திரம் செல்லுங்கள்," என்று கூறியுள்ளதாக இராமாயணத் தில் வருவது சிந்திக்கத்தக்கது.

பாரத காலத்திலும் இத்தமிழ்ச் சங்கத்தைப்பற்றிக் கேள்விப்படுகிறோம். ஆதலின், பாண்டியர்களால் தென் மதுரை, கபாடபுரம், கூடல் முதலிய ஊர்களில் நிறுவப் பட்ட தமிழ்ச் சங்கங்களுக்கும் இதற்கும் யாதொரு தொடர்பும் இல்லை.

இச்சங்கம் எப்போது இறுதி உற்றது என்பது இனி வரும் ஆராய்ச்சியால் அறியத்தக்கது.

---

# IV

## மணிமலைத் தமிழ்ச் சங்கம்

### (உருவ எழுத்துக்காலம்)

1. காலம்:—கி மு 14550 முதல் கி மு 14490 வரை அறுபது ஆண்டுகள்

2. இடம்:—மணிமலை. (இஃது மேருமலைத் தொடரின் 49 கொடுமுடிகளில் ஒன்று. ஏழ்குன்ற நாட்டு மகேந்திரமலைக்கும் தெற்கே இருந்தது. இம் மலை பெருவள நாட்டைச் சேர்ந்தது.)

3. சங்கம் இரீஇயவர்:—திரிபுரம் எரித்த பரமேசுரனை குடிவழியில் வந்த ஒளிச்செங்கோ என்னும் பேர் அரசன்.

4. புலவர்:—(1) சககரன் (சங்கத் தலைவன்)
(2 பேராற்று நெடுந்துறையன்
(3) இடைகழிச் செங்கோடன்
(4) தனியூர்ச் சேந்தன்
(5) பஃறுளியாற்றுத் தலைப்பாய்ச்சல் முத்தூர் அகத்தியன் முதலியோர்.

5. நூல்:—(1) மகேசசூத்திரம் (2) களவியல்
(3) அகத்தியம் (4) பேராற்று நெடுந்துறையன் பெருநூல்
(5) இடைகழிச் செங்கோடன் இயல்நூல்.

6 பாடப்பட்டன:—(1) பேராற்று நெடுத்துறையன் பெருநூல் (2) இடைகழிச் செங்கோடன் இயனூல் (3) தனியூரச் சேந்தனால் பாடப்பட்ட செங்கோன் தரைச் செலவு

7. பாடப்பட்டோர்:—ஒளிச்செங்கோ

8. கவியரங் கேறிய அரசர்:—ஒளிச்செங்கோ

9. வரலாறு:—இச்சங்கமானது ஒளிநாட்டு வேள்குல அரசர் குடிவழியில் வந்த ஒளிச் செங்கோ என்பவனால் கி. மு. 14550ல் நிறுவப்பட்டு அறுபது ஆண்டுகள் நடைபெற்றது.

தமிழ் நாட்டை ஆண்ட ஒளிநாட்டு வேள் குல அரசர்களில் இவனே கடைசியானவன். இவன் பட்டத்துக்கு வந்ததும் அரச இருக்கையை மகேந்திர மலையினின்றும் மாற்றி மணிமலையில் ஏற்பாடு செய்தான். இதனை:—

"பேராற் றருகில் பிறங்கு மணிமலையில்
சீராற்றும் செங்கோ திறற்செங்கோ—நேராற்றும்
பேர்அவை யிலேநூற் பெருமக்கள் சூழ்ந்தேத்தப்
பாரரசு செய்ததமிழ்ப் பைந்தேவி"

(தமிழ்விடு தூது)

என்னும் அடிகளால் அறியலாம்.

இவ்வரசனைப் பற்றித் தனியூர்ச் சேந்தன் எனனும் புலவன், இவன் வானவர் நாடாகிய திபேதது—சீனம்—கடாரம் முதலியவைகளை வென்று அடிப்படுத்தியதைக் குறித்துச் "செங்கோன் தரைச் செலவு" என்ற நூலில் பாடியுள்ளார். இந்நூல் முழுவதும "தாப்புலிப்பா" என்னும் பாவினததால் பாடப்பட்டுள்ளது.

இப்போது இருக்கும் தொல்காப்பியத்திலாவது, அதற்குப்பின வந்த நூலகளிலாவது, தாப்புலிப்பா இனத்தைப் பற்றிக கூறப்படவே இல்லை. இஃது ஒன்றே இந்நூலானது தொல்காப்பியத்துக்கு முற்பட்ட நூல் என்று தெரிவிக்கப் போதுமானது.

இன்னும் இந்நூலின்கண் செங்கோவால் நிறுவப் பட்டு, சக்கரன் என்னும் புலவன் தலைமையில் நடத்தப் பட்ட தமிழ்ச்சங்கத்துக்கு நூல் போற்று நெடுந்துறை யன் பெருநூலும், இடைகழிச் செங்கோடன் இயனூலும் என்று கூறப்பட்டுள்ளது.

தொல்காப்பியததிலும அதற்குப்பின் வந்த நூல்களி லும் காணப்படாத புணர்ச்சி விதிகள் பெருநூலிலும், இயல் நூலிலும் காணப்படுகின்றன.

நீட்டொலிப் புணாச்சி (தீர்க்க சந்தி) எடுதநொலிப் புணர்சசி (குணசநதி), குவித்தொலிப் புணாசசி (விருத்தி சந்தி) என்ற புணர்சசி விதிகள் அவ்விரு நூலிலும் கூறப் பட்டுள்ளன.

ஆதலின், தொல்காப்பியர் காலத்துக்குச சற்று முன் தான, இப்புணர்சசி விதிகளை வடமொழியாளர் எடுததுத் தங்களுடைய மொழிககு இலக்கணம வகுத்திருக்க வேண்டும என்று தெரிகிறது.

இவ்வரசன் மிகுந்த திறமைம வாய்ந்தவன் என்றும், இவன் பெயரைக் கேட்ட ஏனைய அரசர்கள் இடியேறு கேட்ட அரவம் போல நடுநடுங்குவார்கள் என்றும அடி யில் காட்டிய செங்கோன் தரைச் செலவுப் பாட்டால அறி கிறோம்:—

"போராறும் வழிக்கழியும் பிற்படுக்கும் அதன் முனனே
வாராரும் கழலடிககீழ வைத்திடா மணித்தலைகள்
மாண்ட மாண்ட ....."

(செங்கோன் தரைசசெலவு)

இவ்வரசன் நிறுவிய தமிழ்ச் சங்கத்திற்குச சக்கரன் என்னும் புலவன் தலைமை தாங்கினான் என்பது:—

"தமிழ்த் தலைமை தலைக்கொண்டான்
சக்கரன் தக்கார் குழுவில
சிறப்பமைந்தான் ஏனைமொழிச்
சிறுகண்களை அவனை தருகச்
செப்புவேன திறத்தினே"

என்ற செய்யுளால் அறியலாம்.

செங்கோ தமிழ்ச்சங்கம இரீஇத் தமிழை ஆய்ந்தான் எனபது:—

"செங்கோவே ஒளிச செம்மல்
திருக்கோவே மணிக்கோடு
தங்கு பெருவள நாட்டில்
தமிழிருந்து புறங் காக்கும
தமிழ் நாடியாங்கே"

என்ற செய்யுளால் அறியலாம். மேலே கூறப்பட்ட செய்யுட்கள் எல்லாம் தாப்புலிப்பா இனத்தைச் சேர்ந்தனவே.

செங்கோவின அரசு கி. மு. 14490-ல் முடிவு பெறவே, அவனுக்கு அப்புறம நாட்டைச் செம்மையாய் ஆளவும், சீனம்-சீயம-கடாரம்-கிருதி நாடு முதலிய தேயங்களின் அரசர்களை நணபராகக கொள்ளவோ, அல்லது, அடக்கி ஆளவோ, ஒளிநாட்டு ஒளியர் குடி வழியிலாவது, சேர-சோழ-பாண்டியா குடிவழியிலாவது ஆள் இல்லாமற போகவே, செங்கோவால் அடக்கி ஆளப்பட்ட நாடுகள் எலலாம தனனுட்சி பெற்றன. சீன தேசத்தார் செங்கோவால நசுககபபட்டவாகள் ஆனதால், செங்கோவின் ஆட்சி முடிநததும, தமிழ் நாடு சரியானபடி இலலாததால் தமிழ் நாட்டின மீது சீனர்கள் படையெடுத்து வந்து நாட்டைக கைப்பற்றிக் கொண்டார்கள்.

மங்கோலிய (அவுணர்) வகுப்பைச் சேர்ந்த சீன தேசத்தார் ஆட்சி தமிழ் நாட்டில் கி. மு. 14490 முதல் கி. மு. 14058 வரை 432 ஆண்டுகள் நடைபெற்று வந்தது. சீன தேசத்து அவுணர்களுடைய ஆட்சி தமிழ்நாட்டில் மிகக் கடுமையாக இருந்தது. அவுணர் ஆட்சியின் கடைசி அரசர்கள் சூரபதுமன்—சிங்கமுகன்—தாருகன் என்பவர்கள். இவர்கள் மூன்று பேரும் உடன்பிறந்தவர்கள். பானு கோபன் என்பவன் சூரபதுமனுடைய பிள்ளை. இவர்களைப் பற்றிக் கந்தபுராணம் விரிவாய்ப் பேசுகின்றது. ஆண்டுக் கண்டுகொள்க.

கந்த புராணத்தில் தேவர்கள் என்று பேசப்படுவோர்கள் தமிழர்களே.

## உருவ எழுத்து வரலாறு

தமிழ் மொழியானது முதன் முதல் உருவ எழுத்தை உடையதாய் இருந்தது. உருவெழுத்துக்குப் படவெழுத்து, சித்திர வெழுத்து என்றும் பெயர்.

தமிழ் மொழியில் உருவ எழுத்துக் காலம் ஒன்று இருந்தது என்பதைக் குறிக்க, யாப்பருங் கல விருத்தி உரையில், ஓர் ஆசிரியனுக்குத் தெரிந்திருக்க வேண்டிய எழுத்து வகைகளைக் கூறுமிடத்து உரையாசிரியர் பின் வரும் சூத்திரங்களை மேற்கோள்களாகக் காட்டுகிறார். அந்தச் சூத்திரங்கள் எந்த நூலினின்றும் எடுக்கப்பட்டவையோ தெரியவில்லை. உரையாசிரியரும் கூறவில்லை. ஆதலின் இச் சூத்திரங்கள் எல்லாம் ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியன் காலத்துக்கு முற்பட்ட இலக்கண நூல்களில் கண்டவைகளே யாகும். அவையாவன:—

**எழுத்து:**—"உருவே, உணர்வே, ஒலியே, தன்மை என
இருவகை எழுத்தும் ஈரிரண்டாகும்".

**உருவு:**—காணப்பட்ட உருவ மெல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவில் ஓவியன் கைவினைபோல
எழுதப் படுவது உருவெழுத் தாகும்"

**உணர்வு:**—கொண்டவோர் குறியாற் கொண்ட வதனை
உண்டென்று உணர்த்துவது உணர்வெழுத
தாகும்"

**ஒலி:**—இசைப்படு புள்ளின் எழாஅல் போலச
செவிப்புல னாவது ஒலியெழுத் தாகும்"

**தன்மை:**—முதற்காரணமும் துணைக்காரணமும் துணைக்
காரணத்தொடு தொடரிய உணர்வும் அவற்றொடு
புணர்ந்த அகத்தெழு வளியின் மிடற்றுப் பிறந்
திசைப்பது தன்மை எழுத்தே"

**எழுத்து** என்னும் சொல தமிழ் மொழியில் வழஙகப் படுவதை நோககின், படவெழுததுககள் பயிலப்பட்டு வந்த தனாலேயே அவ்வெழுததுக்களுககு **எழுத்து** என்றே பெயர் அமைந்தது.

எழுத்து = சித்திரம்—ஓவியம்

ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியனின தங்கக் கனிகளிலும், இரததினக் கனிகளிலும் சீன தேசத்தார் வேலை செய்து வந்தார்கள் என்று முனனமே கூறினும. அககாலததில தான் சீனம்-எகுபதியம முதலிய மொழிகளுககுத தமிழ் உருவ எழுததுககளைப பாரதது உருவ எழுததுககளை அமைத்துக்கொண்டார்கள். அதற்குமுன் அமமொழி

களுக்கு எழுத்துக்கள் கிடையா. அம்மொழிகளில் இன்றும் உருவ எழுத்துக்களே நடைமுறையில் இருக்கின்றன.

கி. மு. பத்து லக்கத்துக்கும், கி. மு. எட்டு இலக்கத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் தமிழர்கள் சீயம—சாவகம் — சுமேரியா — பாபிலோனியா — அசிரியா — பாலத்தீனம்—எகுபதியம் முதலிய நாடுகளில் குடியேறி, தங்கள் நாகரிகத்தைப் பரப்பிவந்தார்கள். தமிழர்களுடைய உருவ எழுத்துக்களும் அந் நாடுகளில் பரவலாயின.

சுமேரியா—அக்கேடியா — பாபிலோனியா—முதலிய நாடுகளில் உருவ எழுததுககளே ஆப் பெழுத்துக்களாக மாறி வழஙகப்பட்டன.

## ஆப்பெழுத்து (Cuniform characters )

இப்போது சீன மொழிககு 420 எழுத்துக்கள் இருக்கின்றன இதுதான் தறகாலம உலகததில் உள்ள மொழிகளுள் அதிக எழுத்துககளை உடைய மொழி. இதனைக் கூர்ந்து நோக்குமிடததுத தமிழாகும் உருவ எழுததுக் காலத்தில் மிகக எழுத்துககள் இருநதிருக்க வேண்டும. இத்தனை என்று கணக்கிடுவதறகுத் தகுந்த ஆதாரம் கிடைக்கவில்லை.

---

# V

## குன்றம் எறிந்த குமரவேள் தமிழ்ச் சங்கம்

(கோல் எழுத்துக் காலம்)

1. காலம்—கி. மு. 14058 முதல் கி. மு. 14004 வரை 54 ஆண்டுகள்

2. இடம்:—திருச்செந்தூர் (இந் நகருக்குத் திருச் சீரலைவாய் என்றும், அலைநகர் என்றும் பெயர்.)

3. சங்கம் இரீஇய அரசர்:—குன்றம் எறிந்த குமரவேள்

4. புலவர்:—

(1) குன்றம் எறிந்த குமரவேள் (தலைவர்)
(2) வாதாபி அகத்தியர்
(3) புலத்தியா I
(4) சனகா II
(5) சனற் குமாரர் II

முதலியோர்

5. நூல்:—(1) குமரம் (2) முருகன் அகப் பொருள் விருத்தி
(3) மகேசம் (4) களவியல் என்னும் ஐந்திணை அகநூல்
(5) நெடுந்துறையன் பெருநூல்
(6) செங்கோடன் இயனூல்
(7) (வாதாபி) அகத்தியம

முதலியன.

6. பாடப்பட்டன:—(1) குமரம்
(2) முருகன் அகப்பொருள் விருத்தி
(3) (வாதாபி) அகத்தியம்

முதலியன.

7. பாடப்பட்டோர்:—குன்றம் எறிந்த குமரவேள்

8. கவி அரங் கேறிய அரசர்:—குன்றம் எறிநத குமரவேள்

9. வரலாறு:—தமிழ் நாட்டின்மேல் முதன் முதல் படை எடுததவர் நிருதி நாட்டு (Africa) நிருதாகள் (African Negroes). இவர்களுடைய ஆட்சி தமிழ் நாட்டில் கி. மு. 16,500 முதல் கி. மு. 16,000 வரை 500 ஆண்டுகள் நடைபெறறது.

கி. மு. 16,000-ல் திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் நிருதாகளாகிய திரிபுர இராககதர்களை வென்று, நாட்டை மீட்டு, தமிழர் ஆட்சியை நிறுவினர். நாடும் கி. மு. 14,490 வரை தமிழரிடம் இருந்தது.

கி. மு. 14,490-ல் தமிழ் நாடு இரண்டாம் தடவை அன்னியா ஆட்சிக்கு உட்பட்டது.

இரண்டாம் தடவை படை எடுத்து வந்து நாட்டைக் கைப்பற்றியவர்கள் சீன தேசத்து அவுணர்கள். இவர்களுடைய ஆட்சியில் தமிழ்நாடு நானூற்றி முப்பத்திரண்டு ஆண்டுகள் துன்பம் உற்று இருந்தது. கடைசியாக ஆண்ட சீன தேசத்து அவுண அரசர்களாகிய சூரபதுமன்—சிங்கமுகன்—தாருகன்—பானுகோபன் முதலியோர்களை கி. மு. 14058-ல் நம செந்தில் மேய வள்ளி மணாளர்-குன்றம் எறிந்த குமரவேள வென்று, நாட்டை மீட்டு, தமிழர் ஆட்சியை மறுபடியும் நிறுவினர்.

நாட்டை மீட்டதோடு நில்லாமல் நாடு வளம் பெற, மொழி வளம்பெற வேண்டும் என்று, திருச் செந்தூரிலேயே தமிழ்ச் சங்கம் ஒன்று நிறீஇ, முத்தமிழையும் வளர்த்து வந்தார்.

குமரம் என்னும் பேரிலக்கண நூலை வகுத்து, ஐந் திலக்கணங்களேயும, அகத்தியர், புலத்தியர் I, சனகர் II, சனற் குமாரா II, நால்வருக்கும போதித்தார்.

திரிபுரம் எரித்த விரிசடைப பெருமானிடம் ஆலின் கீழ் அறம நானகும கேட்ட சனகர்—சனற் குமாரர் வேறு குமர வேளிடம் உபதேசம பெறறவாகள் அவாகள் பரம் பரையில் வந்தவாகள் ஆவார்கள். வாதாபி அகததியரும் பொதியமலே அகததியரின மாணாககர் பரமபரையில் வநதவா இருவரும் ஒருவா என்று மயங்கறக.

திருச செநதூரில குமரவேள் முதததமிழையும சங்கம் இரீஇ ஆயந்துவநதாா எனபது:—

"முத்தமிழை ஆயும் வரிசைக்கார" என்று திருச் செநதூாத திருப்புகழில அருணகிரியாா கூறிஇருப்பதால் அறியககிடககின்றது. குமரவேள் முத்தமிழும் வலலவர் எனபதனைத திருபபுகழில் பல இடங்களிலும "முத்தமி ழோனே" என்று கூறப் பட்டுள்ளதை நோக்க விளங்கும.

குமர வேளிடம உபதேசம் கேட்ட அகததியர் பொதியமலே அகத்தியரின வழி வந்தவா என்பதனே:—

"சிவனை நிகா பொதியவரை முனிவன் அகமகிழ
இருசெவி குளிர இனிய தமிழ்—பகர்வோனே"

எனற திருசசெந்தூர்த திருப்புகழால் அறியலாம்.

குமரவேள் நால்வருக்கும் (சனகர்—சனற் குமாரர்—அகத்தியர்—புலததியர்) முததமிழ் இலககண இலக்கியங் களேயும், தமிழ் வேத ஆகமங்களேயும போதித்தார் என்பது:—

"சனகர்க்கும் அகத்திய புலத்திய சனற் குமாரர்க்
கும்—விபரதிதியில ஞான
படலத்துறு லக்கணலக்கியத் தமிழ்த் திரயமத்தில்
அகப்பொருள விருத்தியினை பழுதறறுணா
வித்தக சது—தரு நாதா"

என்ற பழனித் திருப்புகழாலும்;

"அருமறை தமிழ் நூலடைவே
தெரிந்துரைக்கும்—புலவோனே"

என்ற சுவாமிமலைத் திருப்புகழாலும்,

"அறம் நாலைப்—புகல்வோனே"

என்ற அவிநாசித் திருப்புகழாலும் அறியக்கிடக்கின்றது.

குமரவேள் முத்தமிழ்ப் பேரிலக்கண நூலாகிய "குமரம்" என்ற நூலையும், "முருகன் அகப்பொருள் விருத்தி" என்ற அக நூலையும் யாத்து உதவியது மேற் காட்டிய பழனித் திருப்புகழால் அறியலாம்.

திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான் **மகேசம்** என்ற பேரிலக்கண நூலையும், களவியல் என்ற அகநூலையும் யாத்து அருளினது போல, குன்றம் எறிந்த குமரவேளும் **குமரம்** என்ற பேரிலக்கண நூலையும், அகப்பொருள் விருத்தி என்ற அகநூலையும் யாத்து அருளினார்.

மகேசம்-களவியல்-அகத்தியம்-பெருநூல்-இயனூல் என்ற இலக்கணங்கள் எல்லாம் தமிழ் உருவ எழுத்தாக இருந்த காலத்தில் யாக்கப்பட்டன.

ஆனால்; கி. மு 14490 முதல் கி. மு. 14058 வரை நடைபெற்ற அவுணர் ஆட்சியில் தமிழ் வளங்குன்றி எவ்வளவோ மாறுதல்களை அடைந்தது உருவ எழுத்தாக

இருந்த தமிழ் மொழி கோல் எழுத்தாக மாறிவிட்டது. அதற்கு இணங்கவே, குன்றம் எறிந்த குமரவேள் முன்னோர் இலக்கணங்களைத் தழுவியும், கோல் எழுத்துக் காலத்துக்கு ஏற்றபடியும், புதியன புகுந்த, குமரம் என்ற பேரிலக்கண நூலை வகுத்தார். அதனையே அவர் தம் மாணவர்களுக்குப் போதித்தார். கோல் எழுத்துக் காலத்தில் தமிழ் மொழிக்குப் பதினாறு உயிர்களும் முப்பத்தைந்து மெய்களும் ஆக ஐம்பத்தொரு அக்கரங்கள் இருந்தன என்பது நூல்களாற் புலனாம்.

"வழுதியர் தமிழின் ஒரு பொருள் அதனை
வழிபட மொழியும்—குமரேசா"

என்ற குன்றுதோறாடல் திருப்புகழைக் கூர்ந்து நோக்குமிடத்து, குமரவேள் காலத்துக்குப் பன்னூராயிர ஆண்டுகள் முன்பு ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியனாலும், அவன் முன்னோர்களாலும், அவனுக்குப் பின் கி. மு. 14490 வரை வழி வழி வந்த பாண்டியர்களாலும், வளர்க்கப்பட்ட அகப்பொருள் புறப்பொருள் நூல்களில், அகப்பொருள் நூல்களைத் தழுவி "அகப்பொருள் விருத்தி" என்னும் நூலையும், புறப்பொருள் நூல்களைத் தழுவி "பொருள் நூல்" (அர்த்த சாத்திரம்) என்னும் நூலையும் யாத்துத் தமிழ் உலகிற்கு வழங்கினார் என்று போதருகின்றது.

குன்றம் எறிந்த குமரவேள் சூரபன்மன் முதலாய அவுணர்களைத் தன் வேற் படையால் வென்ற காலத்தில், ஒரு பெரிய கடல்கோள் ஏற்பட்டு, பஃறுளியாறும் பன்மலை அடுக்கும், பெருவள நாடும், ஒளி நாடும், பெருவள நாட்டைச் சேர்ந்த மேருமலைத் தொடரும், அதனைச் சேர்ந்த கொடுமுடிகளில் பலவும், கடலால் விழுங்கப்பட்டன என்பது பின்வரும் பாசுரங்களால் வெளியாம்:—

1. "வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்து
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"
(சில—காடு—20—22)

2. சேடன் மேருவும் சூரனும் தாருகனும் வீழ
......விடும்—அங்கைவேலா"

3. நேமிச் சூரொடு மேருத்தூள் எழ"
(திருச்செந்தூர் திருப்புகழ்)

4 "மேரு கிரிதலை மண்டு தூள்எழ வேலைஉருவிய
—வயலூரா"
(விராலிமலை)

5 "பாதாள சேடனுடல் ஆயிர பணா மகுட மாமேரோ
டேழு ஓதுகிரி சூரருடல் பாழாக தூணிகிணி லேற
புவி வாழவிடு —சுடர் வேலா"
(திருமாகாளம)

6. "கலக அசுரர் கிளைமாள மேருகிரி தவிடுபட உதிர
ஒலவாரி அலைகதற வரி அரவம் வாய விடா
(திருவிடை மருதூர்)

இங்கே கூறப்பட்ட கடல்கோள் ஏற்பட்டது கி மு. 14058-ல். இதனையே உரையாசிரியர்கள் ஆதியூழி என்று கூறுப. ஆதியூழி என்பதும் முதலூழி எனபதும ஒன்றே.

இம் முதலூழியைப்பற்றி அடியார்கது நல்லார் சிலம்பு 8-1-ல் "நெடியோன் குன்றமும தொடியோள் பவ்வமும்" என்ற அடிகட்கு,

"அக்காலத்து, அவர் நாட்டுத தென்பாலி முகத்திற்கு வடவெல்லை யாகிய பஃறுளி என்னும் ஆற்றிற்கும், குமரி

என்னும் ஆற்றிற்கும் இடையே எழுநூற்றுக்காவத வாறும், இவற்றின் நீர்மலிவானென்ன மலிந்த ஏழ்தெங்கநாடும், ஏழ் மதுரை நாடும், ஏழ் முன்பாலை நாடும், ஏழ் பின்பாலை நாடும, ஏழ் குன்ற நாடும, ஏழ் குணகாரை நாடும், ஏழ் குறும்பனை நாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும, குமரி, கொல்லம் முதலிய பன்மலை நாடும், காடும், நதியும், பதியும, தடநீர்க்குமரி வடபெருங் கோட்டின் காறும, கடல கொண்டொழிதலால் குமரியாகிய பவ்வம் என்றார் என்று உணர்க. இஃது என்னை பெறுமாறு எனின், வடிவேல் எறிந்த ... ..(சிலப்பு 11-18&20) என்பதனாலும், கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இறையனார் அகப்பொருள் உரையானும், உரையாசிரியராகிய இளம்பூரண அடிகள் முகவுரையானும் பிற வாற்றானும் பெறுதும்'' என்று கூறியுள்ளதை உற்று நோக்குமிடத்து மேலே கூறியவை விளங்கும். குன்றம எறிந்த குமரவேள் என்பவர் ஒளிநாட்டு வேளாளர் பரமபரையைச் சேர்ந்தவர். திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமான வழி வந்தவர் இவர் முன்னோர்கள் ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியன் காலததுககு முந்தியே, அஃதாவது, கி. மு. 30,000-ககு முந்தியே, வடக்கே சென்று, விந்திய மலைக்கு வடகக யுள்ள நாட்டையும், இமயமலை நாட்டையும் கைப்பற்றி, திருக்கயிலாயத்தை (Mount Kailas) அரசிருக்கை யாகசெயது, ஆண்டிருந்து ஆண்டுவந்தார்கள். சேர—சோழ—பாண்டியர் என்னும் மூவேந்தரும் விந்திய மலைக்கும் தென்பாலி முகததுக்கும இடைப்பட்ட நாட்டை ஆண்டுவந்தார்கள். அப்படி ஆண்டுவருங் காலததில்தான் முதன் முதல் நிருதிநாட்டு நிருதர்களாலும், இரண்டாவது சீன தேசத்து அவுணர்களாலும் படை எடுபபுக்கள் ஏற்

பட்டு, முந்தியது திரிபுரம் எரித்த விரிசடைப் பெருமானு லும், பிந்தியது குன்றம் எறிந்த குமரவேளாலும் தமிழ்க் கப்பட்டன.

குன்றம் எறிந்த குமரவேளுக்கும் சூரபதுமன் முதலிய அவுணர்களுக்கும் நடந்த சண்டையில் முக்கிய உதவியாய் இருந்தவர்கள் கரூரின்கண் அரசாண்ட முசுகுந்தச் சோழ னும், கடார தேயத்து அரசனாகிய இந்திரனும் ஆவர்.

போர் நடந்தபோது சீன தேசத்திலிருந்து அவுணன் சூரபதுமனுக்கு உதவிப்படைகள் வராமல் இருக்க வேண்டி, குமர வேள் முசுகுந்தனையும் இந்திரனையும் கடாரம் வழி யாகச் சீன தேசத்துக்குச் சேனைகளுடன் அனுப்பி, அக் காலத்தில் சீனாவில் அரசுபுரிந்த வலன் என்னும் அவுண னைத் தாக்கும்படி ஏற்பாடு செய்தார். முசுகுந்தனும் வலனை வென்று வாகை சூடினன். முசுகுந்தனால் வலன் என்னும் அவுணன் கொல்லப்பட்டது கி. மு 14058 ஆகும்.

தமிழ் நாட்டில் அவுணர் ஆட்சி நானூற்று முப்பதி ரண்டு ஆண்டுகள் நடைபெற்று இருக்க, கந்த புராணம் 108 சதுர்யுகம் என்று கூறுவதென்னை? எனூற் கூறுதும்:—

வியாசர் காலமாகிய பாரத காலத்துக்கு முந்தி சதுர்யுக வரையறை கிடையாது. வியாசர் சதுர் யுகங்களை வகுத்த தற்கு முன் யுகம் என்பது ஓர் ஆண்டு என்ற பொருளில் வழங்கப்பட்டது. இன்றும் தெலுங்க நாட்டில் யுகாதி என்று ஆண்டுப் பிறப்பைக் கூறுவதும், யுகாதிப பண்டிகை என்று ஆண்டு ஆரம்ப விழாவைக் கொண்டாடுவதும் இதனைத் தெளிவுபடுத்தும்.

| | | | |
|---|---|---|---|
| கலியுகம், | 4,32,000 | ஆண்டுகள் | என்றும், |
| துவாபரயுகம், | 8,64,000 | ” | ” |
| திரேதாயுகம், | 12,96,000 | ” | ” |
| கிரேதாயுகம், | 17,28,000 | ” | ” |

வியாசர் வகுத்தார்.

கலியுகத்தை விட துவாபர யுகம் (தோ = துவா = இரண்டு) இரண்டு மடங்கு அதிக ஆண்டுகள் உள்ளதென்றும், திரேதாயுகம் (திரே = திரி = மூன்று) மூன்று மடங்கு கலியுகத்தைவிட அதிக ஆண்டுகள் உள்ளது என்றும், கிரேதாயுகம் கலியுகத்தை விட நான்கு மடங்கு ஆண்டுகள் உள்ளதென்றும் வகுத்த முறையே யுகக் கட்டுப் பாட்டினை நன்கு விளக்கும்.

இப்போது நாம் வழங்கும் அறுபது ஆண்டுப் பெயர்களும் கி-பி. 426-ல் ஓர் ஆரிய அரசனால் ஏற்படுத்தப் பட்டவை. இப்பெயர்கள் ஏற்பட்டு இற்றைக்கு (1948-க்கு) 1522 ஆண்டுகள் ஆகின்றன. கி. பி. 426-க்கு முன் அறுபது ஆண்டுப் பெயர்கள் கிடையா. ஆனால் அந்தந்த நாட்டுப் பேர் அரசர்கள் பெயரால் இன்ன அரசனுடைய ஆட்சியில் இத்தனையாவது ஆண்டு என்று கூறிவந்தார்களே ஒழிய வேறின்று.

சாலிவாகன சகம் கி. பி. 78-ல் ஏற்பட்ட ஞான்று அறுபதாண்டுப் பெயர்களும் ஏற்பட்டன என்று கூறுவாரும் உண்டு. எப்படி ஆனாலும் அப்பெயர்கள் தொன்று தொட்டவை அல்ல.

ஆதலின், யுகம் என்னும் சொல்லுக்கு உண்மைப் பொருள் ஆண்டு என்பதே.

இப்போது, "108 சதுர்யுகம்" என்னும் தொடர் மொழிக்குப் பொருள் காண்போமாக 108 சதுர் யுகம் என்பதனை "சதுர 108 யுகம்" அதாவது, "நான்கு 108 யுகம்" என்று கொண்டால், $4 \times 108 = 432$ ஆண்டுகள் என்ற பொருள் படுவதை நோக்கலாம். ஆதலின், இதுவே சரித்திர வரம்புக்கும், ஏனைய ஆராய்ச்சிகளுக்கும் இயைபாக உள்ளது.

ஆதலின், புராணக் கூற்றுப் பொய்யன்று. புராணங்களில் கூறப்பட்ட சரித்திர பாகங்களையும், கலைநூற் கருத்துக்களையும், பிரித்துத் தெரிந்துகொள்ள முயற்சி செய்வோமானால் முரண்பாடு நீங்கும் அவ்வாறு தெரிந்துகொள்ள முடியாதவர்களே புராணங்கள் எல்லாம் குப்பைகள் என்றும், அவைகளில் உண்மை என்பது மருந்துக்கும் இல்லை யென்றும் வாய் கூசாது கூறுவர்.

கம்பர் 5000-த்தை அறுபதினாயிரம் என்று கூறியது போல், புராணிகரும் நான்கு 108 யுகத்தை 108 சதுர் யுகம் என்று கூறியுள்ளார்.

## கோல் எழுத்து வரலாறு

தமிழ் மொழியானது உருவ எழுத்தாயிருந்த நிலை மாறிக் கோல் எழுத்தாக ஏற்படுவதற்குப் பன்னூராயிரம் ஆண்டுகள் ஆயின.

உருவ எழுத்துக் காலத்தில் தமிழ் மொழியினின்றும் பிரிந்த எகுபதியம்-சீயம்-சீனம்-கடாரம் முதலிய மொழிகள் இன்றைக்கும் உருவ எழுத்துக்களாலேயே இயங்குகின்றன.

சீன தேசத்து அவுணர்களின் படை எடுப்பினால் தமிழ் நாடு வளங்குன்றி, மொழி வளர்ச்சி பெறுமல, பல

மித அல்லல்களுக்கு உட்பட்டதை நோக்கி, குன்றமெறிந்த குமார வேள் தம்முடைய கருணையினால் அவுணரை அடக்கி, வென்று, தமிழ் நாட்டைத் தமிழர்களிடம் ஒப்புவித்து, மொழிவளம் கருதித் தமிழ்ச் சங்கம் ஒன்றை நிறுவி, மொழியைச் சீர்ப்படுத்துவான் புக்கு, உருவ எழுத்துக் காலத்தில் பொருள்களையும் கருததுக்களையும் குறிக்க இருந்த ஏராளமான எழுத்துக்களையும் குறியீடுகளையும் மாற்றி, ஒலிகளுக்குத தகக கீற்றுக்களை (கீற்று = கோடு = கோல்) உண்டாக்கி, வரிவடி வாகிய நெடுங்கணக்கைச் சீர் செய்தார். உருவங்களை எழுதுவதைவிட, கீற்றுக்களை வரைவது எளிதாயிருநத படியால் எல்லோரும் அதனைக் கைக் கொண்டார்கள்.

இம்மாதிரி, தமிழ் மொழியானது கோல் எழுத்தாய் (Pitmans Short hand like), இருந்த காலத்தில் தான் மராடம்-கூர்சசரம-ஒட்டிரம—சிநதியம்— அரவ ம (Arab) முதலிய மொழிகள் பிரிநதன. அம்மொழிகள் எலலாம் இன்றும் கோல எழுத்துககளாலேயே நடைபெற்று வரு கினறன. இககோல எழுத்துக் காலத்தின பிற் பகுதியில் தான் ஆரியர் வருகை.

ஆரியர்கள் சிந்து-கங்கைச சம வெளிகளில் குடியேறிய ஞான்று, தமிழ், மராடம், சிநதி முதலிய மொழிகளின் எழுத்துக்களைப் பார்த்தத தம்முடைய ஆரிய மொழிக்கும் எழுத்துக்களைக் கற்பித்துக் கொண்டார்கள். அது வரை ஆரிய மொழி எழுத்து இல்லாமல் பேச்சு வழக்கிலேயே இருந்துவந்தது. அப்படி அவாகள் தங்கள் மொழிக்கு ஏற்படுத்திக் கொண்ட எழுததுககளைத தான் நாகரம் என்று கூறுகிறாகள். இருக்த என்று சொல்லப்படும் அவர்க ளுடைய வேதமும அதுவரை எழுதப்படாமல மனப்

பாடம் செய்யப்பட்டுவந்தது. பிற்பட்டுத்தான், நாகர எழுத்துக்களில் இருக்குவேதம் எழுதப்பட்டது. அந்த இருக்கு வேதமே பாரத காலத்தில் இருந்த வியாசரால் இருக்கு—யசுர்—சாமம் என மூன்றாகச செய்யப்பட்டது.

இன்றைக்கும் உருவ எழுததாயுள்ள சீன மொழியில் 420 எழுததுக்கள் உள்ளன. இவ்வளவு எழுத்துககளையும் நினைவில் பதிப்பது என்பது எளிதான காரியமன்று.

தமிழ் மொழிக்குக கோல் எழுத்துக் காலத்தில் அத் துன்பம் நீக்கப்பட்டது. 420 எழுத்துக்களுக்கு மேல இருந்த நெடுங்கணக்கு (51 ஆக) ஐம்பத் தொன்றாகக் குறுக்கப்பட்டது. மொழி வளர்சசி கருதி, குன்ற மெறிந்த குமரவேள் தமிழ் நாட்டில் 54 ஆண்டுகள் இருந்து, தமிழ்ச சங்கத்தில் தலைமை தாங்கி, இலககண நூல்கள், இலககிய நூல்கள், அகப்பொருள் விருத்தி முதலியவைகளை யாதது, முனிவர்களுக்கும், அறிஞர்களுக்கும் அறிவுறுத்தி, தமிழ் நாட்டைக் காய்சின வழுதி என்னும் அரசன் கையில் ஒப்புவித்து, தமிழ்மொழியையும் புரக்கும்படி ஏற்பாடு செய்துவிட்டுப் பின் தாம் தம் இருப்பிட மாகிய கயிலை சென்றார்.

சூரபன்மன் போர் முடிந்ததும் குமர வேளுக்கும் கடார தேசத்து அரசன் மகள் தெய்வயானைக்கும் திரு மணம் திருப்பரங்குன்றத்தில் நடைபெற்றது. பின் சின்னாட் கெல்லாம் குமரவேள் இரண்டாம் மனைவியாக வள்ளிமலை அரசன் மகள் வள்ளியம்மையைத் திருமணம் செய்துகொண்டார்.

குன்றம் எறிந்த குமரவேள் அவுணரை வெல்லுவதற்கு அமைத்த பாசறைகள் ஆறினையும் ஆறு படைவீடுகளாக

இன்றும் நாம் கொண்டாடி வருகிறோம். அவுணருக்கும் குமாரவேளுக்கும் நடந்த சண்டை ஐப்பசி மாதம் அமாவாசை கழிந்த மறுநாள் முதல் ஆறு நாள் நடந்தது. அந்நாட்களை இன்றும் நாம நினைவு கூர்ந்து கந்தா சட்டி உற்சவமாகக் கொண்டாடி நம் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

> "எந்நன்றி கொன்றார்க்கும உய்வுண்டாம் உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்பது தமிழ்வேத மாதலால், அதனைக் கடைப் பிடித்து ஒழுகுகின்றார்கள் தமிழர்கள். இது மாதிரியே திரிபுரம் எரிதத செயதியையும் ஊர்கடோறு முள்ள சிவன் கோவில்களில் தோத்திருவிழாவாகக கொண்டாடுகிறோம். திரிபுரச் சண்டை பதது நாள நடநததால பத்து நாள் உற்சவம் கொண்டாடுகிறோம. இடமாதிரி வெற்றி விழாக களுக்கு எல்லாம் சரிததிரம் மறககப்பட்டுப போகவே, விழாக்கள் வேடிக்கை விழாக்களாக மாறிவிட்டன. இவ விழாககளின் சரிததிரம மறந்துபோகாமல் இருக்கும்படி ஏற்பாடு செய்துள்ளார்கள் தமிழ் நாட்டு ஆன்றோர்கள் என் பது உற்று நோக்குவோர்க்கு விளங்கும்.

தமிழ் மொழிககுக கோல எழுத்துக் காலததில் 51 அக்கரங்கள் இருநதன என்று மேலே கூறினும். அதாவது, உயிர் எழுததுக்கள் 16-ம, மெய்யெழுத்துக்கள் 35-ம ஆக 51 எழுத்துக்கள். இவ்வெண் தமிழ்மொழி வட்டெழுத்தாக மாறின காலததிலும் 51 ஆகவே நடை பெற்று வந்தது. வட்டெழுததுக காலததில இருந்த திருமூலர்,

> "ஓதும எழுத்தொடு உயிர்க்கலை மூவைந்து
> ஆதி எழுத்தவை ஐம்பததோ டொனறென்பர்

சோதி எழுத்தின் நிலை இருமூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக் கொள்ளீரே''

''விந்துவினும் சுழிநாதம் எழுந்திட
பந்தத் தலைவி பதினறு கலையதாக்
கந்தர வாகரம் காலுடம் பாயினள்
அந்தமு மின்றியே ஐம்பத்தொன் றுபதே''

அகாரம் முதலாக ஐம்பத் தொன்றாகி
உகாரம் முதலாக ஓங்கி உதித்து
மகாரம் இறுதியாய் மாய்ந்து மாய்நதேறி
நகாரம் முதலாகும் நந்திதன் நாமமே (திருமூலர்)

என்று தாம் பாடிய தமிழ் மூவாயிரததில் தமிழ் மொழிக்கு 51 எழுத்துக்கள் உண்டு என்றும, வட்டெழுத்துக் காலத்தில் இருந்த 51 எழுத்துககளும ''ஆதி எழுத்து'', அதாவது, வட்டெழுதது காலத்துக்கு முநதி கோல் எழுத்துக் காலத்தில இருந்துவந்தவை என்றும் தெளிவாகக் கூறியுள்ளார். கோல எழுத்துக் காலத்தில ஏற்பட்ட இலக்கணங்களிலும் வட்டெழுத்துக் காலத்தில் ஏற்பட்ட இலக்கணங்களிலும் உருவஎழுத்துக் காலத்தில் இயற்றப் பட்ட பெருநூல்—இயனூல்— என்ற இலக்கணங்களில் கண்ட நீட்டொலிப் புணர்ச்சி—எடுத்தொலிப் புணாசசி—குவித்தொலிப் புணர்ச்சி முதலிய புணர்ச்சி விதிகள் எடுத்து ஆளப்பட்டன. அப்புணர்ச்சி விதிகளை கோல் எழுத்துக காலத்திலும் குமரவேள் தாம் இயற்றிய ''குமரம்'' என்ற பேரிலக்கணத்தில் ஆண்டுள்ளார். அவ்வாட்சி வட்டெழுத்துக் காலத்திலும் தொடர்ந்து வந்து, தமிழ்மொழி சதுர எழுத்தாக மாறின காலத்தில் தொடர்வு அற்றது.

---

# VI

## தலைச்சங்கம்

### (கோல் எழுத்துக் காலம்)

1. காலம்:—14004 B. C. முதல் 9564 B. C.வரை 4440 ஆண்டுகள்.

2. இடம் :— குமரியாற்றங்கரையில் இருந்த தென் மதுரை.

3. சங்கம் இரீஇய அரசர் :— காயசின வழுதி முதல் முதலாம் கடுங்கோன் வரை எண்பத்தொன்பது (89) பாண்டியர்கள்.

4. புலவர்:—இத் தலைச்சங்கத்தின் உறுப்பாளர் எண் 549. இச்சங்கத்தில் ஆதிமுதல் இறுதிவரையில் கலந்துகொண்ட புலவர்கள் 4449 பேர். இவர் களில் பேர் தெரிந்தவர்கள்:—

(1) இறையனார் II :— (இவர் களவியல் செய்த இறை யனார் I குடியில் வந்தவர். ஒளிநாட்டு வேளாள அரச பரம்பரையினர்.)

(2) குன்றம் எறிந்த குமரவேள்:—(இவரும் ஒளிநாட்டு வேளாளர் பரம்பரையைச் சேர்ந்தவரே. இவர் இச்சங்கத்தைக் காய்சினவழுதி கையில் ஒப்பு வித்துவிட்டு, கயிலைக்குச் சென்றுவிட்டபோதி லும் சங்கத்தில் அங்கத்தினராய் இருந்து வந்தார்.)

(3) நிதியின் கிழவர்:—(இவரைக் குபேரன் என்றும் சொல்லுப. இவர் நேபாள தேசத்து அரச பரம்பரையினர். இக் குபேரன் இராவணன் காலத்தில இருந்த குபேரன் அல்லர். இராவ

ணன் காலத்தில் இருந்தவர் அரக்கர் குடி வழியைச் சேர்ந்தவர்.)

(4) **முரிஞ்சியூர் முடிநாகராயர் I** :—(இவர் ஈழநாட்டு முரிஞ்சிப்பதியில் அரசாண்ட முடிநாகர் பரம்பரையில் வந்தவர். நாக அரையர் என்பது நாகராயர் என்று மருவி வழங்குகிறது.) முடிநாகர் என்பது தமிழ்நாட்டில் ஏற்பட்ட பதினெண் மக்கட் பிரிவுகளில் ஒன்று )

(5) **வாதாபி அகத்தியர்**:— (இவ் வகத்தியர் பொதியமலை அகத்தியரினின்றும் வேறானவர். இவர் வாதாபி (மாயாவி) (Badami) என்னும் இடத்தில் குமரவேள் சார்பில் இருந்துகொண்டு அரக்கர் தலைவர்களாகிய மாயாவி-வில்வலன் என்பவரைக் கொன்றவர். குமரவேளிடம் உபதேசம் பெற்றவர். இவர்தான் முதன்முதல் சங்கத்தலைவராய் இருந்தவர்.)

5. **நூல்**:—(1) வாதாபி அகத்தியம் (2) குமரம் (3) முருகன அகப்பொருள் விருத்தி (4) மகேசம் (5) களவியல் (6) பெருநூல் (7) இயனூல் (8) பொதியமலை அகத்தியர் I செய்த அகத்தியம் முதலியன.

6. **பாடப்பட்டன**:—(1) வாதாபி அகத்தியம் (2) பெரும் பரிபாடல் (3) முதுநாரை (4) முதுகுருகு (5) கதிபெறச் செய்யும் களரியாவிரை முதலியன.

7. **பாடப்பட்டோர்**:—(1) குன்றம் எறிந்த குமரவேள் (2) காய்சின வழுதி என்ற இரண்டாம் நிலர் தருதிருவிற் பாண்டியன் முதலிய எழுவர்

பாண்டியர்கள் (3) வாதாபி அகத்தியர் முதலியோர்.

8. **கவி அரங்கேறிய அரசா:**—காய்சின வழுதி முதலிய எழுவர் பாண்டியர்.

9. **வரலாறு:**—இச்சங்கம் 'தலைச்சங்கம்' எனப் பெயர் பெறும். என்னெனின், நிருதர்-ஒளியர்-அவுணர்-ஆட்சிக்குப் பின் முதன் முதலாகப் பாண்டியர் ஆட்சி நிறுவப்பட்டுத் தமிழ்ச்சங்கம் தோற்றிய தாதலின் அப்பெயரைப் பெற்றது என்க.

இச்சங்கம் நிறீஇய முதல அரசனை ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியனின் வழிவந்தவன் ஆவான். காய்சின வழுதி எனனும் இயற்பெயருடன் இரண்டாம் நிலந்தரு திருவிற் பாண்டியன் எனனும் பட்டத்தையும் வகித்தவன். இவன் பட்டத்துக்கு வருவதற்கு ஐம்பத்து நான்கு ஆண்டுகள் முன்னர், தமிழ் நாட்டின் பெரும்பகுதி வடிவேல் எறிந்த வான்பகை பொறாது கடல் கொள்ள, கடலால் கொள்ளப்பட்ட நாட்டிற்கு ஈடுசெய்ய நாடுவேண்டும் எனக் குன்றம் எறிந்த குமர வேளை வேண்டிக்கொள்ள, அவர் வடநாட்டில் தம் ஆட்சியின்கீழிருந்த கங்கைநதி பாயும் நாட்டையும் இமயமலை நாட்டையும் (நேபாளம்-பூத்தானம்) (Bhutan) கொடுத்து, தென்றிசை நகரமாகிய குமரியாற்றங்கரைத் தென்மதுரையிலிருந்தே ஆட்சி செய்யும்படி அருள் செய்தார். இச் செய்தியினையே:—

"வடிவேல் எறிந்த வான்பகை பொறாது
பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்து
குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கையும் இமயமுங் கொண்டு
தென்றிசை யாண்ட தென்னவன் வாழி"

என்று சிலப்பதிகாரம் காடுகாண் காதையில் ஆசிரியர் இளங்கோ அடிகள் கூறவாராயினர் இதற்கு உரை ஆசிரியர் அடியார்க்கு நல்லார் கூறும் உரை நனி மெச்சத் தகுந்தது. இளங்கோ அடிகளின் உள்ளம் தெரிந்து உரை கூறியுள்ளார் நான் மேலே கூறிய கருத்தே அவ் விருவர்க்கும் பொருந்துவதாகும்.

இனி, "தொடியோள் பவ்வம்" என்ற சிலப்பதிகாரத் தொடருக்கு அடியார்க்கு நல்லார் கூறும் உரையை நோக்கு மிடத்து, கி மு. 14,058ல் ஏற்பட்ட ஆதியூழியில் (=கடல் கோளில), குமரியாறும் அவ்வாற்றங் கரையில் இருந்த ஊர்களும் அழியவில்லை என்று தெரிகிறது. என்னெனின், பஃறுளியாற்றுக்கும் குமரியாற்றுக்கும் இடையி லுள்ள நிலப்பகுதி என்கிறார் அதனால், குமரியாறு அழிய வில்லை என்று ஏற்படுகிறது. இன்னும், "தடநீர்க்குமரி வடபெருங் கோட்டின்காறும் கடல்கொண் டொழிதலால்" என்று உரை கூறுகிறார். ஆதலால், தெளிந்த நீரையுடைய அகன்ற பரப்பையுடைய குமரியாறும், அது உற்பத்தி யாகும் மேருமலையின் வடபெருங் கோடும் அழியவில்லை என்று ஏற்படுகிறது

குமரியாற்றங்கரைத் தென்மதுரை என்பது ஏழ் மதுரை நாட்டில் உள்ள ஓர் ஊர். அவ்வூரைத் தவிர்த்து ஏனை ஊர்களே ஆதியூழியில் அழிந்தனவாகும். இப்போது இருக்கும் குமரிக் கோவிலுக்குத் தென்பாகத்தில் சிறிது தொலைவில்தான் குமரியாறு ஓடிக்கொண்டு இருந்தது.

குமரிக் கோடும்—குமரியாறும்—தலைச்சங்கம் இருந்த தென்மதுரையும் கி. மு. 9564ல் ஏற்பட்ட கடல் கோளா லேயே அழிவுற்றன. இதனை உரையாசிரியர்கள் இரண்டாம் ஊழி (=கடல்கோள்) என்பர்.

ஆதியூழியில் குமரிநாடு அழிவுற்றபோது, ஏழ்தெங்க நாட்டின் ஒருபகுதி நக்கவாரத்தீவு (Nicobar Island) என்னும் பெயருடன் அழியாமல் இன்றும் இருக்கிறது. நக்கவாரத்தீவில் உள்ள தேங்காய் ஓடு மிகமிகப் பெரியது. இப்போது பரதேசிகள் கையில் கொண்டிருக்கும் கப்பரையை நோக்க, ஏழ்தெங்கநாடு எவ்வளவு வளப்பம் பொருந்தியது என்பது தெளிவாம். கப்பரை எனனும் தமிழ்ப்பதமே கொப்பரா (Copra) என்று மருவி பிற மொழிகளில் வழங்குகிறது.

ஏழ்குறும்பனை நாட்டின் பகுதிகளை (அழியாதன) இன்னும் திருநெல்வேலிக் கோட்டத்தில கடற்கரை ஓரங்களில் காணலாம்.

புறநானூற்றில் பெருஞ்சோற்று உதியன் சேரலா தனைபபற்றிப் பாடின முரிஞ்சியூர் முடிநாகராயர் தலைச் சங்க காலத்தவர் அல்லர். இவர் இடைசசங்கததுககும் கடைச்சங்கத்துக்கும் இடைப்பட்டுத் திருபபரங்குன்றத்து அருகில் இருந்த தென்மதுரையில் நடந்த தமிழ்சசங்கத தில் இருந்தவர் ஆவர். ஆதலின், இவரை இரண்டாம் முரிஞ்சியூர் முடிநாகராயர் என்று கூறுவதே பொருத்தம்.

சில புலவர்கள் இரண்டாமவரை முதலாமவராக நினைத்துத் தலைச்சங்கம் பாரதகாலத்துக்குப் பின் நடை பெற்றது என்று கூறி வழுககி வீழ்வாராயினர். அவ ரெல்லாம் தமிழுக்குத் தொன்மை அளிபபதில் அழுக்காறு கொண்டு உண்மைககு மாறுபாடாகக கூறுபவரே

இபபோது நம கைக்கு எட்டியிருக்கும் பரிபாடல் தலைச்சங்கததுப் புலவர் பாடிய பெரும்பரிபாடல் அன்று இந்தப் பரிபாடல் இடைச்சங்க காலத்தில் பாடப்பட்டது.

முதுநாரை—முதுகுருகு முதலியன இசை நூல்கள். அவைகளும் கிடைக்கவில்லை.

கதிரொறச் செய்யும் களரியாவிரை என்னும் நூல் ஆன்மாக்களை ஞானமார்க்கத்தை அறிந்து வீடுபேறு அடையப் பாடிய ஞானநூல் என்று தெரிகிறது. அதுவும் அகப்படவில்லை.

தலைச்சங்க நூலகள் நமக்குக் கிட்டாததற்குக் காரணம் தலைச்சங்கத்து இறுதிக்காலத்தில், அதாவது, கி. மு. 9564-ல் ஏற்பட்ட இரண்டாம் பிரளயமே.

## ஊழி

இனி, உரையாசிரியர்கள் கூறும் தலையூழி அல்லது ஆதியூழி, இடையூழி, கடையூழி என்பவைகளைப் பற்றிச் சிறிது ஆராய்வாம்.

“யுக முடிவுடன் மடங்கல் ஊழியாம்” என்பது பிங் கலந்தை. இதனை வைத்துக்கொண்டு, சில புலவர்கள் ஊழி என்பதற்கு யுகமுடிவு என்று பொருள் கொண்டு, ‘ஆதி யூழியின் அந்தத்தே” என்ற தொடருக்கு, ‘திரேதா யுகத் தின் இறுதியில்’ என்று பொருள் கூறுகிறார்கள். அப்படிப் பொருள் கொள்வது சரித்திர முரணாகும். காலவாராய்ச்சி ஒத்து வருவதில்லை.

மடங்கல் என்ற சொல்லுக்குப் பிரளயம் என்ற பொருள் உண்டு. ஆதலின், ஊழி என்னுஞ் சொல்லை உரை யாசிரியர்கள் பிரளயம் என்ற பொருளில் வழங்கி உள்ளார் கள் என்று கொள்ளவேண்டும்.

எழு மேகங்களும் திரண்டு, உருண்டு, குமுறி, இடை யறாது மழையைச் சொரிய, கடல்கள் ஆரவாரித்து, ஓங்கி, எழுந்து, புரண்டு, பெருகி, நாடுகளைத் தன்வாய் படுத்து

அழிப்பதே வழியாகும். அதனையே பிரளயம் என்று கூறுப.

தலையூழி கி. மு 14058-லும், இடையூழி கி. மு. 9564-லும், கடையூழி கி பி. இரண்டாம நூற்றாண்டிலும், அதாவது, கி பி. 145-லும் ஏற்பட்டன.

தலைச்சங்கத்தைக் குறித்துப் பாடிய பாடல் வருமாறு

"வேங்கடம் குமரி தீம்புனற் பவ்வத்து
இந்நான் கெல்லையின் இருந்தமிழ் பயின்ற
செந்நாப் புலவர் செய்திநின் றுரைப்பின
ஆடகக் குடுமி மாடக் கூடலின்
முன்னர்ச் சங்கத் தமர்ப் பலகையில்
திரிபுர மெரித்த விரிசடைக் கடவுள்,
மன்றல் மாரத்தார் குன்றெறி இளஞ்சேய்,
திண்டிறற் புலமைக் குண்டிகைக் குறுமுனி,
பதிமுடி நாகன், நிதியின் கிழவன்,
இனையர் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன் பதின்மர்,
அனையர் நாலா யிர நூற்றொடு
நாற்பதொன் பதின்மர் பார்க்கிற்செந் தமிழோர்
புரிந்தன செய்யுள் பெரும்பரி பாடலும்
முதுமை அடுத்த நாரையும், குருகும்,
கதியுறச் செய்த களரியா விரையும்,
ஆங்கவர் இருந்ததும் அத்தொகை யாகும்;
ஈங்கிவர் தம்மை இரீஇயபாண் டியர்கள்
காய்சின வழுதிமுதல் கடுங்கோன் ஈறு
ஏசிலா வகை எண்பத்தொன பதின்மர்;
கவியரங் கேறினோர் எழுவ ராகும்;
மகத்துவ முடைய அகத்தியர் இலக்கணம்"

தலைச்சங்கத்துக்கு முதன்முதல் தலைவராக இருந்தவர் வாதாபி அகத்தியர். இவருக்குப் பின், வேறு தலைவர்

களும் இருந்தனர். சங்கம் நடைபெற்ற காலமாகிய 4440-ஆண்டுகளும் ஒருவரே தலைவராக இருந்தார் என்று சொல்லமுடியாது. மேலே காட்டிய பாடலில் தலைச் சங்கம் கூடலில் நடைபெற்றதாகக் கூறியது தவறுதலை உடைத்து. குமரியாற்றுத் தென்மதுரைக்கும், கூடல் என்ற தென்மதுரைக்கும் வேறுபாடு காணாத புலவரால் பாடப்பட்டு இருக்கிறது.

இடைச் சங்கத்துக்கு கி. மு. 6805 முதல் கி. மு. 6000-வரை தலைவர்களாய் இருந்தவர்கள் இன்னாரென்று விளங்கவில்லை. கி. மு. 6000-ல் தான் ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியர் தலைவரானார். அவருக்குப் பின்னும் பல பேர் தலைவர்களாய் இருந்திருக்கிறார்கள்.

கடைச் சங்கத்துக்குத் தலைவர் நக்கீரர் என்றால், அவர் கடைச்சங்கத்தில் கடைசியாகச் சங்கம் முடிவடையுங் காலத்தில் இருந்தவரே ஒழிய வேறின்று. அவருக்கு முன்னரே பல புலவர்கள் சங்கத் தலைவர்களாய் இருந்தார்கள்.

தலைச் சங்கத்து முதற் றலைவருக்கு **வாதாபி அகத்தியர்** என்று பெயர் கூறுவானேன் என்றால், அவருக்கு முன் **செங்கோவின்** காலத்தில் நடந்த சங்கத்தில் **முத்தூர் அகத்தியர்** என்பவர் ஒருவரும், மகேந்திரமலைத் தமிழ்ச் சங்கத்தில் **பொதியமலை அகத்தியர்** என்பவர் ஒருவரும், தலைவர்களாய் இருந்தபடியால், அவர்களினின்றும் இவரை வேறு பிரித்து அறிந்துகொள்ளவே வாதாபி அகத்தியர் என்றது.

**வாதாபி** என்ற அடை அவருக்கு எப்படி ஏற்பட்டது என்றால், சூரபதுமனின் தங்கையாகிய அசமுகியின் மைந்தர்களான **மாயாபி—இல்வலன்** என்னும் அவுணா

கள் தண்டகநாட்டில் வாதாபியை (Badami) இருக்கை யாக் கொண்டு, எருமைநாடு, ஆந்திரநாடு, தண்டகநாடு இவைகளை ஆட்சி புரிந்து வந்தார்கள். மாயாவியின் தலை நகர் அவன் பெயரால் மாயாவி—வாதாபி என்று அழைக் கப்பட்டது என்பது சிலருடைய கருத்து.

குன்றமெறிந்த குமரவேளால் அனுப்பப்பட்டு, அந் நாடு சென்ற அகத்தியர், அவர்களுடைய மாயையை உணர்ந்து, அவர்கள் பொது மக்களுக்குச் செய்துவரும் கொடுமையை அறிந்து, போர் தொடுத்து, வாதாபியிலேயே (Badami) கி மு. 14058-ல் அவ்விருவரையும் கொன்று துன்பத்தை ஒழித்தார். ஆதலின், அவருக்கு வாதாபி அகத்தியர் என்று பெயர்.

சிவனடியார்களுடைய வீரத்துக்கு வாதாபி அகத் தியர் ஓர் எடுத்துக்காட்டு. அக்காலத்தில அடியார்கள் அரசியலில் சம்பந்தப்பட்டு, அரசர்களுக்கு உதவி புரிந் துள்ளார்கள். அந்த வாதாபியிலேயே கி பி. 642-ல் இரண் டாம் புலிகேசியைக் கொன்று வாகை சூடின பரஞ்சோதி என்கிற சிறுத்தொண்டநாயனாரைப் பாருங்கள். அவரு டைய வீரம் அவருடைய அடியார் பத்திக்குச் சமானமா கும். அவர் மாதிரியே கோட்புலிநாயனார், கலிப்பகை நாயனார் முதலிய பலரையும் கூறலாம். பொதியமலை அகத்தியரும் வீரத்திலும அடியார் பத்தியிலும் சிறந்தவரே. கி மு 6000-ல் அவர் வழியில் வந்த ஒரு அகத்தியர் இராவணனைக் கந்தருவத்தால பிணித்து, அவன் தென் தமிழ் நாட்டில் இயங்கா வண்ணம் செய்தார். ஆதலின், அக்காலத்தில் அரசியலில் ஈடுபட்டும, சிவனுக்கும் சிவனடி யார்க்கும் அடியாராம் தன்மையை அவர்கள் எல்லாம் விட்டவர்கள் அல்லர். வீரத்தோடு அடியார்களிடத்தில்

அன்பும், சிவத்தை மறவாத நெறியும் உடையவர்களே உண்மையான வீரர்கள்.

வாதாபி அகத்தியரிடத்து வீரத்தன்மையும், சிவநெறியும், அடியார்களிடத்தில் அன்பும் இருந்ததோடு, இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழ்ப் பயிற்சியும், அவைகளில் ஆழ்ந்த ஆராய்ச்சியும் இருந்தன. அதனாலேயே அவரைப் பாண்டியர்களால் நிறுவப்பட்ட தலைச்சங்கத்துக்குத் தலைவராக ஏற்பாடு செய்தார்கள்.

கி. மு 9564-ல் ஏற்பட்ட இரண்டாம் பிரளயத்தால் தமிழ்நாடு நிலைகுலைந்து, தலைச் சங்கமும் முடிவுற்றது. தலைச்சங்கம் இருந்த குமரியாற்றுத் தென்மதுரையும் கடல்கொண்டு ஒழிந்தது. தலைச்சங்கத்தின் கடைசி அரசனான பாண்டியனான முதலாம் கடுங்கோன் என்பவனும் பிரளயத்தில் இறந்துபட்டான். நாடு அரசன் இன்றியும், அரச இருக்கை இன்றியும் தத்தளித்தது.

அச்சமயத்தில்தான் தக்கனின் மூதாதைகளான அரக்கர்கள் (Red Indians from America) தமிழ்நாட்டைக் கைப்பற்றி அரசாளத் தொடங்கினார்கள். அரக்கர்களுடைய ஆட்சி கி. மு 9564 முதல் கி. மு. 7500-வரை தமிழ்நாடு முழுவதும் பரவி இருந்தது.

கி. மு. 7500-ல் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன் அரக்கர்களிடமிருந்து, தமிழ்நாட்டில் பெரும் பகுதிகளைக் கைப்பற்றிப் பாண்டியர் ஆட்சியை நிறுவினான். அரக்கர் ஆட்சியில் மற்றப் பாகங்கள் இருந்தன. அரக்கர் பரம்பரையினரான சோமுகன்-தக்கன்-தக்கனுடைய பேரப்பிள்ளைகளான இரணியன்-இரணியாக்கன், இரணியாக்கனுடைய குமாரன் அந்தகாசுரன்-இரணியன் குமாரன் பிரகலாதன் - அனுகிலாதன்-சங்கிலாதன்-

இலாதன் - விரோசனன் - மாபலி - சர்ச்சன் - சகுனி - பூதந்த நாபன் - காலநாபன் - மகாநாபன் - மகாவாகு - புலத்தியன் (குன்றம் எறிந்த குமரவேள் மாணாக்கன் அல்லன்) - கார்த்த வீரியார்ச்சுனன் - புலத்தியன் பேரன்மாரான இராவணன் - கும்பகருணன் - விபீடணன் - குபேரன் - மது - வாலசிங்கன் - சிசுபாலன் - தந்தவக்கிரன் - சராசந்தன் முதலியோர் இமயம் முதல் குமரிவரை யுள்ள தமிழ்நாட்டைப் பங்கிட்டு ஆண்ட வர்கள் ஆவார்கள். திருமாலின் ஒன்பது அவதாரங்கள் என்று நாம் இப்போது கூறுகின்ற நிகழ்ச்சிகள் எல்லாம் இவ்வரக்கர் ஆட்சியை ஒழிக்கவே நிகழ்ந்தன என்பது தமிழ்நாட்டுச் சரித்திரத்தில் விரிவாகக் கூறப்படும். ஆண்டுக் கண்டுகொள்க.

அடியார்க்குநல்லார் முதற்சங்க காலத்தை முதலூழி இறுதி என்று கொள்வர். "முதலூழி இறுதிக்கண் தென் மதுரை அகத்து இருந்த தலைச் சங்கத்து" (சிலப்பு—8) என்பது காண்க. ஆகலின், இவ் வரிக்கு முதலூழிக்கு அப்புறம் ஏற்பட்ட தலைச்சங்கம் என்பதே பொருளாகும்.

அவரே, சிலப்பதிகார உரைப் பாயிரத்தில், "இரண்டாம் ஊழியதாகிய கபாடபுரத்தின் இடைச்சங்கத்து" என்று கூறுவதால், இடைச்சங்கம் இரண்டாம் ஊழி ஏற்பட்ட பின் நிறுவப்பட்டதென்றே பொருளாகும்.

முதலூழி கி. மு. 14058-லும், இரண்டாம் ஊழி கி. மு. 9564-லும் ஏற்பட்டன என்பது உரையாசிரியர் கூற்றுக்கு முரண்பட்டது அன்று.

---

# VII

## முதுகுடுமித் தமிழ்ச்சங்கம்

## (வட்ட எழுத்துக் காலம்)

1. காலம்:—7500 B. C. முதல், 6900 B C வரை அறுநூறு (600) ஆண்டுகள்.

2. இடம்:—கொற்கை, மாறோகமண்டலத்தில உள்ள ஒரு கடற்றுறைப பட்டினம்.

3. சங்கம் இரீஇய அரசர்:—
பல் யாகசாலை, முதுகுடுமிப் பெருவழுதி, (இவனுக்குப் "பரமேச்சுரன்" என்ற பட்டம உண்டென்று வேள்விக்குடிச் சாசனம் கூறுகினறது)

4. புலவர்:—

| வரிசை எண் | சமாஜ எண் | பெயர் | ஆதாரம் | | பாட்டு மொத்தம |
|---|---|---|---|---|---|
| | | | பக்கம | பாட்டு எண் | |
| 1 | | இநதிரனர் | தமிழ் ஐந்திரநூல் | | |
| 2 | 145 | காரிகிழார் | 531 | 1066 | 1 |
| 3 | 286 | நெடுமபல்லியத்தனா | 859 | 1497 | 1 |
| 4 | 287 | நெடும்பல்லியத்தை (பெண்) | 860 | 1498—9 | 2 |
| 5 | 289 | நெட்டிமையார் | 861 | 1561—3 | 3 |
| 6 | | பரத முனிவா (ஆரியா) | பரதம | | |
| 7 | | புரோகித அகத்தியா I (ஆரியர்) | கூத்துநூல் | | |

N. B:—பரத முனிவா செயத 'பரதம்' என்னும் தமிழ நூலையும், அகத்தியா செய்த கூத்து நூலையும் முதனூலாகக் கொண்டு இசைநுணுக்கம் எனனும் வழி நூலைச் சிகண்டியார் செயதாா. சிகண்டியார் இடைச்சங்கப்புலவர் ஆவா.

5. நூல்:—ஐந்திணை அகநூல் (களவியல்), குமரம், அகப் பொருள் விருத்தி, ஐந்திரம், பாரதம், கூத்தநூல்.
6. பாடப்பட்டன:—ஐந்திரம்—பாரதம்—கூத்தநூல் முதலியன.
7. பாடப்பட்டோர்:—பல யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி முதலியோர்.
8. கவி அரங்கேறிய அரசர்:—
9. வரலாறு:—தலைச் சங்கம் அழிந்த பின் சுமார் 2060 ஆண்டுகள் நாடானது தமிழ்ச் சங்கம் இன்றி, தமிழ் அரசர்கள் இன்றி, தமிழ்மொழி வளர்ச்சி குன்றி இருந்தது. சேர-சோழ-பாண்டியர்கள் ஒற்றுமை இன்றி, வலிகுன்றி இருந்தார்கள்.

இவ்வாறு நாடு குழம்பி இருந்த காலத்திலதான், கி. மு. 9560 ல், அரக்கர்கள் கடல் வழியாகத் தமிழ்நாடு புகுந்து, எளிதாக நாட்டைக் கைப்பற்றி அரசாளத் தொடங்கினார்கள்.

அரக்கர்கள் விந்தியமலைக்குத் தெற்கே உள்ள தமிழ் நாட்டைக் கைப்பற்றி ஆண்டுகொண்டு இருந்தபோது, கி. மு. 9000 ல் ஆரியர்கள் காக்கேசியாப் பக்கம் இருந்து வந்து சிந்துநதி தீரத்தில் குடியேறினார்கள். ஆண்டு இருந்த தமிழ் அரச குடும்பங்களும் ஒற்றுமையின்றி இருந்ததால், புதியராய் வந்த ஆரியர்களுக்கு அடங்கி வாழ்ந்துவந்தார்கள். ஆரியர்கள் தமிழ் அரசர்களோடு மலைந்து வெகு விரைவில் பிரமாவர்த்தத்தையும், ஆரியாவர்த்தத்தையும் நிலைநாட்டிக் கொண்டார்கள். அவ்விரண்டிற்கும் 'இந்துஸ்தானம்' என்று பாரசீகர்கள் பெயரிட்டார்கள். 'இந்து' என்பது பாரசீகப் பதம். ஆரியர்கள் 'இந்துஸ்தானத்தை' நிறுவப் பல தமிழ் அரசர்களே உதவியாய் இருந்தார்கள் பல

தமிழ் அரசர்களும், பல சிறந்த தமிழ்க் குடும்பங்களும் ஆரிய மதத்தைத் தழுவிக்கொண்டார்கள்.

"மாணிக்கவாசகர் காலம்" என்ற ஆராய்ச்சி நூலில் பக்கம் 495 ல் அடியில் வருமாறு கூறப்பட்டுள்ளது:—

"இருக்குவேதத்தில் (I—108—8) கூறப்பட்டுள்ள யதுக்கள்-துருவாசர்கள்-துருகியர்கள் - அணுக்கள்-பூருக்கள் என்பவர் தமிழ்க் குடியினர். பரதர், விசுவாமித்திர குடியினர்-பக்தர்-பலானர்-அலிநர்-சிவர்-விஷாகியா முதலிய குடியினரும் தமிழரே. இவர்களில் பூருக்கள் என்னும் தமிழ்க் குடியினரே ஆரியரோடு கலந்துகொண்டு தம்மவர்க்கு இரண்டகம் செய்துவந்தார்கள்" என்று கூறப்பட்டுள்ளது

"வேத காலத்து இந்தியா" (Vedic India) என்னும் நூலில் பக்கம் 298-314 ல் ஆரியர் தென் தமிழ் நாடு புகுந்தது படை எடுப்பினால் அன்று எனவும், தமிழ் அரசர்களையும், தமிழ் வள்ளல்களையும் தம்முடைய சூழ்ச்சியில் உட்படுத்தி, வேள்வி முதலிய ஆடம்பர வாழ்க்கையினால் தென்னாட்டில் நிலைத்துவிட்டனர் என்றும் கூறப்பட்டுள்ளது, கருத்தூன்றி நோக்கத்தகுந்தது. ஆரியர் சூழ்ச்சிக்குத் தமிழரிலேயே சில வகுப்பார் உதவியாய் நின்றமையும் அந்த நூலில் எடுத்துக் காட்டப்பட்டு இருக்கிறது.

மேலே கூறப்பட்ட, ஆரியர் சூழ்ச்சியில் அகப்பட்ட அரசர்களில் ஒருவன் முதுகுடுமிப் பெருவழுதி ஆவன். இவன் ஆரியர்களுடைய உதவியையும், ஏனைய தமிழ் அரசர்களுடைய உதவியையும் பெற்று, 2060 ஆண்டுகள் நடந்த அரக்கர் ஆட்சியில் வெறுப்புக்கொண்ட குடிகளுடைய உதவியையும் பெற்று, கி மு 7500 ல் அரக்கரிடமிருந்து தென்னாட்டைக் கைப்பற்றிப் பாண்டியர் ஆட்சியை நிறுவினான்.

கொற்கையம் துறையை அரசிருக்கையாகச் செய்தான்; தனக்குச் சண்டையில் உதவிசெய்தவர்களுக்குப் பல நன்மைகளைச் செய்தான்.

ஆரியர்கள் தனக்குச் செய்த உதவிக்குப் பதிலாக அவர்களைத் தென்னாட்டில் குடியேறும்படி செய்து, அவர்கள் விரும்பியவாறே, பல நூறு யாகங்களைச் செய்தான். யாகங்களைச் செய்ததோடு நில்லாமல் பல ஊர்களையும் கொடையாக வழங்கினான். அவனுக்கு அதனால் 'பல் யாக சாலை'' என்ற பட்டம் ஆரியர்களால் கொடுக்கப்பட்டது

முதுகுடுமி யானைப் படையை மிகுதியாக உடையவன். அக்காலத்தில் யானைப்படைதான் சிறந்தது; இக்காலத்தில் உள்ள 'தாங்கிகள' (Tanks) போல. அதனாலன்றோ, ''யானையுடைய படைகாண்டல் முன் இனிது'' என்ற மொழியும் எழுந்தது

முதுகுடுமிப் பெருவழுதியைப் பற்றிய சாசனப் பகுதி வருமாறு:—

(பராந்தகன் நெடுஞ்சடையனால் கொடுக்கப்பட்ட
வேள்விக்குடிச் சாசனப் பகுதி)

''கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந் தவிர்த்த,
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யெனும் பாண்டியாதிராசனால்,
நாகமா மலர்ச்சோலை நளிசினைமிசை வண்டலம்பும்
பாகனூர்க் கூற்றமெனும் பழனக் கிடக்கை நீர்நாட்டு,
சொற்கணாளர் சொலப்பட்ட சுருதிமார்க்கம் பிழையாத
கொற்கைகிழான் நற்கொற்றன் கொண்ட வேள்வி முற்றுவிக்க,
கேள்வி அந்தணாளன் முன்பு நின்று வேள்விக்குடி என்றப்பதியைச்
சீரோடு திருவளரச் செய்தார் வேந்தன் அப்பொழுதே
நீரோடு அட்டிக்கொடுத்தமை பால் நீடுபுத்தி துய்த்ததன்பின்

.. ... ...

மேனாள்நின் குரவரால் பான்முறையின் வழுவாமை
மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப் பாலது
ஆன்வதானை அடல்வேந்தே வேள்விக்குடி யெனும் பெயருடையது

ஒல்காவேற் றானையொடு ஓதவேலி உடன்காத்த
பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியெனும் பரமேச்சுரனால்
வேள்விக்குடி எனப்பட்டது வேள்வியிற் றரப்பட்டதனை
துளக்கமில்லாத கடற்றானையாய் களப்பிரனால் இறக்கப்பட்டது.

... ... ...

களப்பிரர் ஆட்சி பாண்டிநாட்டில் கி. பி. நான்காம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 6-ம் நூற்றாண்டுவரை நடை பெற்றுவந்தது. களப்பிரர் என்போர் வடவர். அமண மதத்தைத் தழுவியவர். சிவமதத்தை வெறுத்தவர். தமிழரைப் பலவிதத்திலும் துன்புறுத்தியவர். முதுகுடுமி காலம் முதல் அனுபவித்துவந்த வேள்விக்குடியை ஆரியாகளிடம் இருந்து பிடுங்கினவர்கள். அந்தச் செய்தியைத் தான் "களப்பிரனால் இறக்கப்பட்டது" என்று சாசனம் கூறுகிறது. கி. பி. ஆறும் நூற்றாண்டின் தொடக்கத்தில், அதாவது கி பி. 520-ல் சிவனருளால் மதுரையில் மூர்த்தி நாயனாரும், தொண்டைமண்டலத்துக் களத்தைக் கோனாகிய, களப்பாள கோத்திரத்தைச் சேர்ந்த கூற்றுவ நாயனாரும் சேர்ந்து களப்பிரரை விரட்டி அடித்துத் தென்னாட்டைக் கைப்பற்றித் தமிழர் ஆட்சியை நிறுவினார்கள்.

மூர்த்திநாயனார் கி. பி. 520 முதல் கி. பி. 575 வரை மதுரையில் அரசாண்டார். மூர்த்திநாயனாருக்குப் பின் இரண்டாம் கடுங்கோன் என்கிற பாண்டிய அதிராசன் பட்டத்துக்கு வந்து கி. பி. 575 முதல் கி. பி. 600 வரை அரசாண்டான்.

இரண்டாங் கடுங்கோனும், காஞ்சியில் அரசுபுரிந்த பல்லவ சிம்ம விட்டுணுவும் கி. பி. 575-ல் கருநட அரசனை (களப்பிர அரசன்)ப் புறங்கண்டார்கள். கி. பி. 7-ம் நூற்றாண்டில் மேலைசளுக்கிய முதலாம் விக்கிரமாதித்தனும், அவனுடைய பேரன் விசயாதித்தனும் கருநடரோடு

(களப்பிரர்) சண்டையிட்டு அவர்கள் மறுபடியும் தென்னாடு புகாதவாறு தடுத்தார்கள்.

களப்பிரரால் பிடுங்கப்பட்ட வேள்விக்குடியை மறுபடியும் இரண்டாம் முறை ஆரியர்களுக்கு வழங்கியவன் பராந்தகன் நெடுஞ்சடையன் என்னும் பாண்டியன். அவன் பாண்டிநாட்டை கி. பி. 765 முதல் கி. பி. 790 வரை அரசாண்டவன் இவன் பல்யாகசாலைமுதுகுடுமியின் பரம்பரையில் வந்தவன் என்று சாசனப் பகுதியால் அறிகிறோம்.

வேள்விக்குடியை முதன்முதல் ஆரியர்க்கு ஈந்த அருந்திறல் முதுகுடுமி என்பான், பஃறுளி என்னும் ஆற்றை வெட்டி, பெருவள நாட்டை வளம்படுத்திய ஆழி வடிம்பலம்ப நின்ற பாண்டியன் நெடியோன் என்பவனுடைய வழிவந்தவன் என்பது,

"எங்கோ வாழிய குடுமி தங்கோச்
செந்நீர்ப் பசும்பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"

என்னும் புறப்பாட்டால் தெரிகிறது.

"பல்சாலை முதுகுடுமி
தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன் போல"
(759—மதுரைக்காஞ்சி)

என்னும் மதுரைக்காஞ்சி அடிகளால், இவன் முத்தமிழும் கைவந்த, ஆன்றவிந்தடங்கிய நல்ல புலவர்களைக் கொண்டு, கொற்கையம்பதியில் தமிழ்ச்சங்கம் என்று சொல்லும்படியான புலவர் கூட்டத்தைக் கூட்டி, அப்புலவர்களைப்

லிய எட்டுக்குன்றங்களிலும் முக்கியமான ஊர்களிலும் குடியேறிச் சமணமதத்தை வளரச்செய்தார்கள்.

கி. பி. 575-ல் பட்டத்துக்குவந்த பாண்டியன் இரண்டாங் கடுங்கோனும் அவன் பின் வந்த அவனிசூளாமணி, செழியன்சேந்தன், கூன்பாண்டியன் முதலியோரும் சமண மதத்தைத் தழுவி அம்மதத்தைச் வளரச்செய்தார்கள்.

கருநட அரசர்கள் ஆட்சியிலேயே கி. பி. 470-ல் சமண மதத் தலைவனாயிருந்த **வச்சிரநந்தி** என்பவன் சமணத்தை வளர்க்க ஒரு தமிழ்ச்சங்கம் இரீஇயினன். அதில் சமணப்புலவர்களும் ஏனைய சைவப் புலவர்களும் கலந்து தமிழை ஆராய்ந்தார்கள். சமணப்புலவர் பலர் பல தமிழ் நூல்களை யாத்தார்கள். சைவப்புலவர்களும் சிவபிரான் மேல் பல நூல்கள் யாத்தார்கள். சமணப்புலவர்களில் சிலர் சாக்கியநாயனார் போன்று சிவபத்தி மிக்கு பல நூல்களை யாத்தார்கள். கருநட அரசர்கள் வடுகர் ஆனதால் தமிழ்மொழி வளர்ச்சியில் அவர்களுக்குக் கருத்து இல்லாமற் போனபோதிலும், மதவளர்ச்சி கருதித் தமிழை வளர்த்தார்கள். இது, தற்காலம் கிறித்துவப் பாதிரிகள் தங்கள் மதவளர்ச்சி காரணமாகத் தமிழ்நூல்களை யாத்து வெளியிடுவதுபோல என்க.

இச்சமணச்சங்கத்தில் வளர்ச்சியுற்ற தமிழ்மொழி யானது புனிதமற்று, மணிப்பிரவாள நடை பெற்று, புத்துருக்கொண்டு, வடமொழிக் கதைகள் பல கொண்ட புராணங்கள் யாக்கப்பெற்று வளர்ந்துவந்தது.

இக்காலத்தில், கூடலில் வடமொழிப் பட்டிமண்டபம் ஒன்று ஏற்பட்டு அதில் வடமொழியும் வளர்ந்துவந்தது. வடக்கிலிருந்து வந்த சில ஆரியர்களும், மதுரைமாநகரின்

கண்ணே ஆரியமதத்தைத் தழுவிய **குயக்கொண்டான்** போன்ற சில தமிழர்களும் அந்தச் சங்கத்தில் அமர்ந்து, வடமொழியைப் பயின்று அதனை வளர்த்தார்கள்

குயக்கொண்டான் என்பவன் ஆரியம் நன்று, தமிழ் தீது என்று எழுதியும் பேசியும் வந்தான் அவனை ஒட்டிப் பலபேர் தமிழ் மொழியைக் கெடுக்கவும் ஏற்பாடு செய்தார்கள்

குயக்கொண்டானுக்கும் இரண்டாம் நக்கீரருக்கும் மொழி பற்றிய வாதம் ஏற்பட, அதில் நக்கீரர் II வெற்றி பெற்றுக் கொண்டானுடைய தருக்கை அடக்கினார்

அப்போது நக்கீரர் II பாடிய அங்கதப் பாட்டுக்கள் வருமாறு :—

(1) " முரணில் பொதியில் முதற்புத்தேள் வாழி
பரண கபிலரும் வாழி—அரசுடனே
ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்டான்
ஆனந்தம் சேர்க சுவாகா,"

(2) " ஆரியம் நன்று தமிழ்தீ தெனவுரைத்த
காரியத்தால் காலக்கோட் பட்டானை—சீரிய
அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்
செந்தமிழே தீர்க்க சுவாகா."

என்பனவாம்

வச்சிரநந்தியால் துவக்கப்பட்ட தமிழ்ச்சங்கமானது கி பி 520-ல் முடிவு அடைந்தது மதுரையில் இருந்த வடமொழிப் பட்டிமண்டபமும் குயக்கொண்டானுடைய தோல்வியால் ஒழிந்தது என்றாலும், கி பி 520-க்குப் பின் தமிழில் வடமொழிக்கலப்புச் சிறிது சிறிதாக ஏறிக் கொண்டேவந்தது தனித்தமிழ் வளர்ச்சி குன்றிற்று இயற்கை வனப்பு அழிந்தது செயற்கை வனப்புடன் தமிழ்மொழி மிளிரத் தொடங்கிற்று ஒவ்வொரு கலங்

கட்கும வடமொழிச் சார்பாகப புராணங்கள் வகுக்கத தொடங்கினர்கள்.

**(வச்சிரநந்தி தமிழ்ச்சங்கம் முற்றுப்பெற்றது.)**

---

## VII

## மதுரை நான்காம் தமிழ்ச் சங்கம்

**(சதுர எழுத்துக் காலம்)**

(கி. பி. 520 முதல கி. பி. 1901 வரை 1381 ஆண்டுகள் சஙகம் நடைபெறவில்லை).

**(1)** **காலம்:**—1901 கி பி மே மாதம், 24-ம் தேதியில் இருநது சங்கம ஆரமபிககபபட்டு நாளது வரை நடைபெற்றுவருகிறது

**(2)** **இடம**—நான்மாடக்கூடல என்னும மதுரை

**(3)** **சங்கம இரீ இ ய வ ர்**—பாலவனததம் நிலக்கிழவா பொ பாண்டித்துரைத தேவர்.

**(4)** **புலவா**—(க) திரு மகாமகோபாததியாயர், தாக்ஷிணாததிய கலாநிதி, உ. வே சாமிநாத அய்யா அவாகளா, சென்னை

(உ) திரு ரா இராகவையஙகார் அவாகளா, சேது சமத்தான வித்துவான், இராமநாதபுரம

(ங) திரு திருநாரணையஙகாா, செநதமிழ்ப பததிராசிரியா—மதுரை.

(ச) திரு அரங்கசாமி அயயங்காா, மதுரை

(ரு) திரு. சேற்றூா சுபபிரமணியக கவிராயா, சோழவந்தான்.

(சா) லிருந்து (கரு) முடிய

(கஎ) திரு மு ரா கந்தசாமிக கவிராயர், மதுரை

(கஅ) திரு. மு. ரா அருணாசலக் கவிராயர், மதுரை, முதலிய 251 பேர்கள் ஆவார்கள்

**(5) நூல்**—தொல்காப்பியம், நன்னூல், வீரசோழியம் முதலியன

**(6) பாடப்பட்டன**— * * *

**(7) பாடப்பட்டோர்.**— * * *

**(8) கவி அரங்கேறியவர்**— * * *

**(9) வரலாறு**—கி பி 520 ல் அரசியல் மாறுதலினால் வச்சிரநந்தியால் ஏற்படுத்தப்பட்ட தமிழ்ச் சங்கம் கலைந்துபோகவே, அதற்குப் பின் 1381 ஆண்டுகள் தமிழ்ச்சங்கம் நடைபெறாமல் நின்றுவிட்டது

கி பி 1901-ம் ஆண்டில், மதுரையில் நான்காவது தமிழ்ச்சங்கம் ஏற்படுத்தப்பட்டு நாளதுவரை நடந்து வருகிறது இன்னும் நீடித்து நடக்கும் என்று தெரிகிறது இச்சங்கத்தில் பல புலவர்கள் இதுவரை தலைமை தாங்கி இருப்பதும், இச்சங்கத்தில் **251**-க்கு மேற்பட்ட புலவர்கள் உறுப்பினர்களாக இருப்பதும், தமிழைப்பற்றிய ஆராய்ச்சிகள் நடைபெற்றுவருவதும் நாம் நேரே காணும்போது, இதற்கு முன் நடந்த சங்கங்களிலும் நடைபெற்ற காரியங்களைப்பற்றி ஐயங்கொள்ள இடமுண்டா ?

பாலவனத்தம் நிலக்கிழவர் (சமீன்தார்) பாண்டித்துரைத் தேவர் அவர்களின் பெருமுயற்சியால் இந்த நான்காம் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது

இச்சங்கத்தில், ஆரம்பித்த நாள் முதல் தலைமை ஏற்றவர்கள் :—

(1) திரு பாண்டித்துரைத் தேவர் அவாகள
(2) ,, S. சாமிநாத விசய தேவா ,,
(3) ,, P S சுபபிரமணிய ஐயா ,,
(4) ,, இராசராசேஸ்வர முததுராமலிங்க சேதுபதி ,,
(5) ,, இராவபகதூா M ஆறுமுகம பிளளை ,,
(6) ,, ஆனரபிள K இராம அய்யஙகாா ,,
(7) ,, ,, P. இராமநாதன் ,,
(8) ,, மகாமகோபாத்தியாயா உ வே சாமிநாத அய்யா ,,
(9) ,, சண்முக ராசேஸவர நாகநாத சேதுபதி ,,

என்பவாகள

இநத மாதிரிதான முன் நடநத சஙகஙகளிலும பல புலவாகள தலைமை ஏறறு நடததிவநதாாகள. தலைச் சங்கத்திற்கு அகததியா தலைவா. இடைச சங்கததிற்குத தொலகாபபியா தலைவா. கடைச சஙகததிற்கு நககீரா தலைவர் என்று சொன்னால், அவாகள எலலாம அநதநதச சங்கஙகளில ஒவவொரு காலததில தலைமை ஏறறவர்களே யாவா அவாகளைபபோல எததனையோ புலவர்கள் அநதநதச சங்கஙகளில் தலைமை ஏறறுளளாார்கள

இநத நான்காம தமிழ்சசங்கததில் புரவலர்களாகவும, புலவர்களாகவும, உறுப்பினாகளாகவும இருந்தவர்கள், இருபபவர்களுடைய பெயர்கள் வருமாறு·—

(a) (1) பாலவனததம நிலககிழவா
திரு பொ. பாண்டிததுரைத தேவா அவாகள்

(2) மாண்புமிக்க திரு பாஸ்கர சேதுபதி அவர்கள்
(3) ,, திரு. இராசராசேஸ்வர
முததுராமலிங்க சேதுபதி ,,
(4) ,, புதுக்கோட்டை மகாராசா ,,
(5) ,, திருவாங்கூா ,, ,,
(6) ,, பரோடா ,, ,,
(7) ,, மைசூா ,, ,,
(8) ,, தாபங்கா ,, ,,
(9) ,, கொசசி ,, ,,
(10) ,, எடடையாபுரம ,, ,,
(11) ஆண்டிபபட்டிச சமீன் திரு பெததாசசிச
செடடியாா ,,
(12) சேத்தூர்ச் சமீன் திரு. வி டி. எஸ
சேவுகபாண்டியத தேவா ,,
(13) திரு. எ எல எ ஆா. அருணசலம
செட்டியாா ,,
(14) ,, இராமசசநதிரத தேவா ,,
(15) ,, சிங்கமபட்டிச சமீன சுபபிரமணிய
தீாத்தபதி ,,
(16) ,, இராசா தினகர பகதூர் ,,
(17) ,, ராம-மெ-சித-வைரவன்
செட்டியாா ,,
(18) ,, மெ-லெ-மெ-இராமநாதன்
செட்டியார் ,,
(19) ,, மெ-அரு-நா- ,, ,,
(20) ,, ராம-அரு-அரு-ராம-அருணலம
செட்டியார் ,,

(21) ,, அரு-அரு-சோம சோமசுநதரம
செட்டியார் அவாகள

(22) ,, மெ-அரு-அரு-அருணசலம
செட்டியாா ,,

(23) ,, முதது-கரு-வே-அழகபப
செட்டியார் ,,

(24) ,, வீர-பெ-ராம-வெ-பெதத
பெருமாள செட்டியாா ,,
முதலியோா

(b) இசசஙகததின உறுபபினாகளாயிருநது நூல்களைப புதிதாக எழுதியும, பழைய நூலகளை ஆராய்நது வெளிபபடுததியும, சஙகததிலிருநது மாதநதோறும வெளியாகும "செநதமிழப" பததிரிகைககு ஆராய்சசி உரைகள எழுதியும வநதவாகளும வருபவாகளும:—

(1) to (7) * * * * *

(8) திரு சென்னை. பூவை அடடாவதானம
கலியாணசுநதர முதலியாா அவாகள

(9) and (10) * * * * *

(11) யாழபபாணம திரு ஆ முததுததமபி
பிளளை ,,

(12) ,, ,, அ. குமாரசாமி
பிளளை ,,

(13) திருநெலவேலி. ,, கவிராச நெலலையபப
பிள்ளை ,,

(14) * * * * *

(15) தரஙகமபாடி திரு ப அ முததுததாண்டவ
ராய பிளளை அவாகள்

(16) விருநது (18) வரை * *

(19) சென்னை திரு காஞ்சி நாகலிங்க முதலியார் அவர்கள்

(20) விருநது (24) வரை * *

(25) சென்னை திரு நா சுவாமி வேதாசலம் ,,

(26) விருநது (28) வரை * *

(29) திருவனந்தபுரம் சுவாமி உருத்திர கோடீசுரர் ,,

(30) * * * *

(31) தஞ்சை திரு வி கோபாலசாமி ரகுநாத ராசாளியார் ,,

(32) * * * *

(33) நாகபட்டினம் திரு ஜி சதாசிவம்பிள்ளை ,,

(34) * * * *

(35) கோயமுத்தூர் திரு சி கள் சொக்கலிங்கம் பிள்ளை ,,

(36) விருநது (38) வரை * *

(39) கீழக்கரை திரு செ மு செய்யது மகமது ஆலிம் புலவர் ,,

(40) புதுக்கோட்டை திரு எஸ் இராதாகிருஷ்ணையர் ,,

(41) விருநது (46) வரை * *

(47) திருச்சி திரு எஸ்.வி. கண்ணபிரான்பிள்ளை ,,

(48) கோயமுத்தூர் திரு. பகடாலு பி எஸ் நரசிம்மலு நாயுடு ,,

(49) விருநது (53) வரை * *

(54) நெல்லை திரு வி பி சுப்பிரமணிய முதலியார் ,,

(55) இரங்கூன் திரு வி. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்கள்
(56) கொழும்பு ,, சி. த. கைலாசம் பிள்ளை ,,
(57) * * * *
(58) பெங்களூர் திரு ரா. கிருஷ்ணசாமி அய்யங்கார் ,,
(59) லிருந்து (61) வரை * *
(62) கோவை திரு பூ. அ. இராமலிங்கம் செட்டியார் ,,
(63) லிருந்து (68) வரை * *
(69) பாரிஸ் எம். சூலியன் வின்சன் ,,
(Mr. M. Julien Vinsen)
(70) லிருந்து (82) வரை * *
(83) திருச்செங்கோடு திரு எஸ். காளியண்ணக் கவுண்டர் ,,
(84) லிருந்து (85) வரை * *
(86) பல்லாரி திரு ஜே. வி. சுப்பிரமணிய அய்யர் ,,
(87) திருச்செங்கோடு திரு தி. அ. முத்துசாமிக் கோனார் ,,
(88) சென்னை திரு ஜே. எ. கோபிநாத ராவ் ,,
(89) * * * *
(90) லிருந்து (95) வரை * *
(96) திருவாரூர் பாவா வைத்தியலிங்க முதலியார் ,,
(97) * * * *
(98) திருத்துறைப்பூண்டி திரு இராமசுப்பா முதலியார் ,,
(99) லிருந்து (100) வரை * *

(101) பாமா திரு பி சாமசன் அவாகள்
(102) லிருநது (106) வரை * *
(107) கோவை திரு துடிசைகிழாா அ சிதமபர முதலியாா ,,
(108) லிருநது (161) வரை * *
(162) மதுரை ஆனரபிள சே இராமய்யஙகாா ,,
(163) லிருநது (173) வரை * *
(174) இராமநாதபுரம திரு மு இராகவய யங்காா ,,
(175) லிருநது (196) வரை * *
(197) சீவில்லிபுததூா திரு ரா கு நலலகுறறாலம பிளளை ,,
(198) லிருநது (225) வரை * *
(226) சேலம, திரு அ வரதநஞசைய பிளளை ,,
(227) லிருநது (245) வரை * *
(246) சென்னை திரு டி கோபாலாச்சாாலு ,,
(247) லிருநது (250) வரை * *
(251) தஞசை திரு எ ஜி பிசசைமுததுப பிள்ளை ,,

குறிப்பு —இநதபபட்டி கருணாமிருதசாகரததில எழுதியுள்ள படி கொடுக்கபபட்டிருககிறது .

இநத நான்காம தமிழ்ச்சங்கததில் எபபடிப பல புலவாகள பல ஊர்கள், பலதேசங்களிலிருநது சங்க உறுப்பினர்களாகி, தமிழ்மொழி ஆராய்ச்சி செய்துவருகிறார்களோ, அபபடியேதான் முன் இருநத சங்கங்களிலும் இருநதிருககவேண்டும. அதனைத் தெரிநதுகொள்ளுவதற்காகவே இவவளவு விரிவாய் எண்டுக்கொடுக்கபபட்டுளளது.

---

## XIII. கோவைத் தமிழ்ச்சங்கம்

கொங்கு நாட்டின் தலைநகராகிய கோயமுத்தூரிலே (கோவை) கி பி 1915-ம ஆண்டுககு முநதியே பண்டிதர் திருச்சிறறமபலம் பிளளையால ஒரு தமிழ்சசங்கம நிலை நாட்டபபட்டது

கி பி. 1915-ல் அநதத் தமிழ்ச் சங்கத்துக்கு பெரிய புராண உரையாசிரியர் திரு. **சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் B A**, அவர்கள் தலைவராகவும், கோவை வக்கீல் திருவாளர் **C M இராமச்சந்திரஞ் செட்டியார்** அவர்கள் செயலாளராகவும் தெரிந்தெடுக்கப்பட்டார்கள். அன்று முதல் அசசங்கம் நாளதுவரை நடைபெற்று வருகிறது.

கோயமுத்தூரில C K சுபபிரமணிய முதலியார் தகப்பனுர் கந்தசாமி முதலியார 1866 கி பி. யில் **சைவப் பிரசங்கசாலை** ஒன்று ஏற்படுத்தினுர். அதற்கு கோயமுத்தூர் வைசியாள் வீதியில் ஒரு கட்டிடம உள்ளது. அந்தக் கட்டிடத்தில்தான் கோவைத தமிழ்ச்சங்கம் நடைபெற்று வருகிறது.

இச்சங்கத்தைப பற்றிய விவரங்கள இன்னொரு சமயம் விவரித்து எழுதபபடும

## XIV. கரந்தைத் தமிழ்ச்சங்கம்

இச்சங்கமானது தஞ்சாவூர்க் கோட்டத்திலே தஞ்சைக்கு அடுத்த கருந்தட்டாங்குடியிலே (கரந்தை) கி. பி. 1911 மே மாதம் 14-ல் **திரு வே இராதாகிருட்டினப் பிள்ளை,** B A அவர்களால் ஏற்படுத்தப்பட்டு, திருவாளர் **த வே உமாமகேசுவரம் பிள்ளை,** B A, B L அவர்களால் வளர்க்கப்பட்டு, இப்போது நடைபெற்று வருகிறது

இச்சங்கத்திலிருந்து மாதந்தோறும் "தமிழ்ப் பொழில்" என்ற தனித்தமிழ்ப் பத்திரிகை ஒன்று கி பி 1925 (குரோதன) சித்திரை முதற்கொண்டு தொடங்கப் பெற்று நடைபெற்று வருகிறது

இச்சங்கத்தைப்பற்றிய விவரங்கள் இன்னொரு சமயம் விவரித்து எழுதப்படும்



## பின் இணைப்பு I

### தமிழ் நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெற்றதற்கு ஆதாரங்கள்

(1) பஃறுளியாற்றுத் தென் மதுரையில் நடந்த தமிழ்ச் சங்கத்தைப்பற்றி மதுரைக் காஞ்சியின் (761—763 அடிகளில்) கூறப்பட்டுள்ளது. அது வருமாறு :—

“ தொல்லாணை நல்லாசிரியர்
புணர்கூட் டுண்ட புகழ்சால் சிறப்பின்
நிலந்தரு திருவின் நெடியோன்.”

இது, முதலாம் நிலந்தருதிருவின் நெடியோன் என்கிற ஆழிவடிம்பலம்பநின்ற பாண்டியனையும், அவன் இரீஇய பஃறுளியாற்றுத் தென்மதுரைத் தமிழ்ச்சங்கத்தையும் பற்றியது. இச் சங்கமானது 30,000 B. C. முதல் 16,500 B. C. வரை நடைபெற்றது.

நல்லாசிரியர் புணர்—கல்வி, ஒழுக்கம், அறிவு முதலியவைகளிற் சிறந்த நல்ல புலவர்களுடைய கூட்டம்.

புணர்—புணர்ப்பு, கூட்டம், சங்கம்.

கூட்டுண்ட—ஒருவரோடு ஒருவர் கலந்து, உரையாடி இன்பந்துய்த்த.

“ அறிவுடையார் தம்முட் குழீஇ நகலின
இனிதாயிற் காண்பாம் அகல்வானத்து
உம்பர் உறைவார் பதி ” என்பதையும் நோக்குக.

ஆதலின், ‘ நல்லாசிரியர் புணர்கூட்டுண்ட ’ என்பதற்கு, கல்வி, அறிவு, ஒழுக்கம் வாய்ந்த புலவர்கள் ஒருவரோடு ஒருவர் கலந்து, தம்முள் கருத்து ஒப்பப் புணர்ந்த கலப்பினையுடைய சங்கத்தின் முடிவுகளை எடுத்து ஆண்ட என்று பொருள் கொள்வது பொருத்தம்.

மேலே காட்டிய அடிகளில் கூறியுள்ள நல்லாசிரியர்களால புகழபபட்ட பாண்டியன் நிலந்தருதிருவின் நெடியோன என்பவன் ஆழிவடிமபலமப நின்ற பாண்டியன் ஆவான். அவன் இற்றைக்கு 31,946 ஆண்டுகளின்முன்னர் கடல் கொண்டுபோன பெருவளநாடு, ஒளிநாடுகளைக கைப பற்றி, பஃறுளி ஆறு எனனுமை ஆறறை மேருமலைத் தொடரினின்றும வெட்டி, பெருவளநாட்டை வளப்படுத்தினவன். அவனே அபபஃறுளி ஆற்றஙகரையில தென்மதுரை என்ற அழகிய நகரை உண்டாககி, அதனைத தனது அரச இருககையாக்கி, அங்கே ஒரு தமிழச்சங்கத்தையும் நிலைபெறச் செய்து, முத்தமிழையும ஆராயந்து புலவாகளைப் புரந்துவந்தான இதனை

> "செந்நீர்ப் பசும்பொன் வயிரியாக்கீந்த
> முந்நீர் விழவின் நெடியோன்
> நன்னீர்ப்பஃறுளி மணலினும் பலவே"

என்னும புறபபாட்டால் அறியலாம

(2) **தலை—இடை—கடைச்சங்கங்கள்**

இமமூன்று சங்கங்களைப பற்றியும பேராசிரியா தொல-மர-94-உரையில், "**மூன்றுவகைச் சங்கத்துச் சான்றோரும அது கூறுர்,**" என்று கூறுவதை நோககுங்கள

(3) **பொதிகைமலைத் தமிழ்ச்சங்கம்**

கமபராமாயணம் நாடவிட்ட படலம 30-ல

> "தென்தமிழ்நாட் டகன்பொதியில
> திருமுனிவன் தமிழ்சசஙகம் சேர்கிற் பீரேல"

என்று கூறுகிறுா

இராமாயண காலததுக்கு, அஃதாவது, கி. மு 6000-க்கு முன்பே பொதிகைமலை அகத்தியரால் நிலைநாட்டபபட்ட

தமிழ்ச்சங்கம் ஒன்று இராமாயண காலத்திலும் தனிசிறப்பாக நடந்துவந்ததைப்பற்றிச் சுக்கிரீவன் அனுமார் முதலிய வானரவீரர்களுக்கு கூறுவதை நோக்குங்கள்.

(4) **இடைச்சங்கம்**

தொல்காப்பியப் பாயிரத்தில், நிலந்தருதிருவிற் பாண்டியன் அவையத்து அதங்கோட்டாசான் முன்னிலையில் தொல்காப்பியம் அரங்கேற்றப்பட்டதாகப் பனம்பாரனார் எனும் புலவர் கூறுகின்றார். இவண் கூறப்பட்ட நிலந்தருதிருவிற் பாண்டியன் என்றும் நிலந்தருதிருவிற் பாண்டியன் ஆவன். இவன் கி. மு. 6000-ல் இருந்தவன்.

ஆழிவடிம்பலம்பநின்ற பாண்டியனே முதலாம் நிலந்தருதிருவிற் பாண்டியன் ஆவான். இவன் கி. மு. 30,000-ல் இருந்தவன். பஃறுளியாற்றுத் தென்மதுரையில் அரசாண்டவன்.

இங்கே (தொல்காப்பியப் பாயிரத்தில்) குறிக்கப்பட்டவையோ, இடைச்சங்கம் நடைபெற்ற **கபாடபுரம்** என்னும் இடத்தில் நிகழ்ந்த **தமிழ்ச் சங்கமேயாகும்.**

இந்தக் கபாடபுரத் தமிழ்ச் சங்கத்தைப்பற்றியேதான் **கம்பர்** தம் நூலில்,

"அத்தி ருத்தகு நாட்டினை அண்டர்நாடு
ஒத்தி ருக்குமென் றுரைஉரை யொக்குமோ
எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்
**முத்தும் முத்தமி ழும்**தந்து முற்றலால்" —(ஆறுசெல-53)

என்று குறிப்பிடுகிறார்.

இக் கபாடபுரச் சங்கத்தைப்பற்றி **வான்மீகியும்** தம்முடைய வடமொழி இராமாயணத்தில் குறிப்பிட்டுள்ளார். கபாடபுரத்தில் எடுக்கும் முத்துக்குக் **கபாடம்** என்றே பெயர். இந்த முத்தானது ஏனைய இடங்களில் எடுக்கும்

மூத்ததைவிட உயர்ந்தது என்று வடமொழி இராமாயணத்தாலும், உரோம—கிரீஸ—எகிப்து முதலிய அன்னிய நாட்டுச் சரித்திரங்களாலும் அறியக்கிடக்கின்றது.

(5) **சீனதேசத்துச் சரித்திரம்**

நம் நாட்டுத் தமிழ்ப் புலவர்களுடன், நம் நாட்டு இலக்கியங்களுமேயன்றி, தமிழ்நாட்டுத் தொடர்புடைய **சீனதேசத்தார்** தங்கள் இலக்கியங்களில் தமிழ்ச் சங்கங்களைப் பற்றிக் கூறியுள்ளார்கள்.

**திருவாளர் R இராகவையங்கார்** அவர்கள் எழுதிய **'தமிழ் வரலாறு'** முதற்பாகம் 5 ம் பக்கத்தில்,

"மூன்றும் அரசனாகிய பாண்டி (பாண்டியன்) ஏற்பட்டு, தேர் முதலியன செய்து, அரண் வகுத்து, உலக வரலாறு அறிந்த அறிஞர் பலரைக் கூட்டி, நூலாராய்ச்சி செய்தனன். இசையளவும் கண்டான்," என்று கூறப்பட்டுள்ளது.

**மூன்றும் அரசன்**—என்பது சேர—சோழ—பாண்டியர் என்னும் வழக்கில் உள்ள முறையில் மூன்றாம் அரசன் பாண்டியன்.

**தேர் முதலியன செய்து**—என்று தேரைக் குறிப்பிடுவதால் இடைச்சங்கம் நிறுவிய வெண்டேர்ச் செழியனைக் குறிப்பிட்டுள்ளது. இடைச்சங்கம் கி. மு. **6805** ல் நிறுவப்பட்டது.

**உலக வரலாறு அறிந்த அறிஞர்**—என்றதால் அவ்விடைச்சங்கத்தில் உலக சரித்திரங்களை நன்றாய் அறிந்த புலவர் பலர் குழுமி இருந்தார்கள் என்றும், அவர்கள் பல சரித்திரங்களை இயற்றினார்கள் என்றும் அறிகிறோம்.

**இசையளவும் கண்டான்**—என்றதால், அச்சங்கத்தில் இசைத்தமிழ் நன்றாய் ஆராயப்பட்டது என்றும், குருகு,

வெண்டாளி, இசைநுணுக்கம் முதலிய இசை நூல்கள் அப்பொழுது இயற்றப்பட்டன என்றும் அறிகின்றோம்.

தமிழ் நாட்டில் தமிழ்ச் சங்கங்கள் நடைபெறவில்லை என்றும், நடந்ததாகக் கூறுவது வெறுங்கதை என்றும் கூறும் அறிஞர்கள் மேலே காட்டிய சரித்திரக் குறிப்பினையும் கதை என்பாரோ?

(6) **திருப்பரங்குன்றத்துத் தென்மதுரைச் சங்கம்**

சின்னமனூர்ச் செப்பேட்டில் அடியில் கண்ட வாசகம் பொறிக்கப்பட்டு இருக்கிறது —

> **"மதுராபுரிச் சங்கம் வைத்தும்**
> **மகாபாரதம் தமிழ்ப்படுத்தும்"**

(பாண்டியன் மெய்க்கீர்த்தி)

துவரைக் கோமான் கண்ணன் கபாடபுரத்துத் தமிழ்ச் சங்கத்தைக் கி மு **3105**-ல் அழித்தபின், **பாண்டியன் சாகரத்துவசன்** என்கிற **பப்புருவாகனன்** (அலலி மகன்) திருப்பரங்குன்றத்துப் பக்கம் இருந்த தென்மதுரையில் ஒரு தமிழ்ச்சங்கத்தை நிலைநாட்டி, அதில் தமிழ் நூல்களை ஆராய்ந்ததோடு, வியாசர் செய்த **மகாபாரதம்** என்னும் இதிகாசத்தைப் **பெருந்தேவனார்** என்னும் புலவரைக் கொண்டு தமிழில் பாடும்படி செய்தனன். அப் பாரதம் இப்போது கிடைத்திலது.

(7) **கடைச்சங்கம்**

சிறுபாணாற்றுப்படை (66—67 அடிகள்)

> "**தமிழ்நிலை** பெற்ற தாங்கரு மரபின்
> மகிழ்நனை மறுகின் **மதுரை**"

இதற்கு 'உரைகண்ட நச்சினார்க்கினியர் **தமிழ்நிலை பெற்ற மறுகின் மதுரை,**' எனக் கூட்டி, "**தமிழ் வீற்றிருந்த தெருவினையுடைய மதுரை,**" எனக் கூறுவது காண்க.

**தமிழ்நிலை** என்பதனை தமிழ் நிலையத்தை—தமிழ்ச் சங்கத்தைத் தன்கண்பெற்ற மறுகின மதுரை என்று கொள்க. பசுக்கள் நிற்குமிடம் "ஆன்நிலை" (ஆசாரம் 33) என்று கூறப்படுவதுபோல, தமிழ்ப் புலவர்கள் கூடுமிடம் '**தமிழ் நிலை**' ஆயிற்று.

**தேர்நிலை—படைநிலை—நீர்நிலை** என்ற வழக்குகளும் தமிழில் உண்டு என்பதையும் உற்று நோக்குக.

(8) **சிலம்பு—புறஞ்சேரி—130-132-133**

> "புலவர் செந்நாப் பொருந்திய நிவப்பின்
> பொதியில் தென்றல் போலாது ஈங்கு
> **மதுரைத் தென்றல் வந்தது** காணீர்"

என்று இளங்கோ அடிகள், பொதியமலையினின்றும் வரும் தென்றலினும், **மதுரையினின்றும்** வரும் **தமிழ்த் தென்றலுக்குள்ள சிறப்பு, புலவர் செந்நாப் பொருந்திய ஏற்றம்** என்று கூறுதல் காண்க.

பொதியைச் **சந்தன மணங்கமழ்** தென்றலினும், மதுரைத் **தமிழ்மணங்கமழ்** தென்றல் சாலச்சிறப்புடைத்தே.

(9) **புறநானூறு—72**

> 'ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
> மாங்குடி மருதன் தலைவன் ஆக
> உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்
> புலவர் பாடாது வரைகவென் நிலவரை"

இது, கி. பி. **174** முதல் கி. பி. **204** - வரை அரசாண்ட தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ் செழியனால் பாடப்பட்டது.

இவன் கடைச்சங்க காலத்தவன். சங்கம் அரங் கேறிய மூவர் அரசர்களில் ஒருவன் இவன் காலத்தில்

நக்கீரர் சங்கத் தலைவராக இல்லை என்பது இவன் பாடலால் அறியக்கிடக்கின்றது. நக்கீரர் சங்கத் தலைவராக ஏற்பட்டது மாங்குடி மருதனுக்குப் பின்னேயாகும். 1950 ஆண்டுகள் நடைபெற்ற சங்கத்துக்கு அவ்வப்போது பல புலவர்கள் தலைவர்களாக அமர்ந்திருந்தார்கள். சங்கம் அரங்கேறிய அரசனே, சங்கத்தைப்பற்றிக் கூறி இருக்க அதைப்பற்றி ஐயங்கொள்ளக் காரணம் சிறிதும் இல்லை.

(10) கலித்தொகை—68

"மதிமொழி யிடல்மாலை வினைவர்போல வல்லவர்
செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர"

என்ற அடிகட்கு நச்சினார்க்கினியர், "அறிவாகிய சொல்லைச் சொல்லுதலை இயல்பாக உடைய அமைச்சரைப் போல, நூல்வல்ல ஆசிரியராலே பொல்லாவாகிய சொற்கள் இடையிற் புகுதாமல் போக்கப்பட்ட தம் செவிகள் செய்யாக, முன்னுள்ள சான்றோர்கள் கூறிய செய்யுட்கள் தம் சொல்லை வளர்க்கும் நீராக, அறிவினையுடைய நாவாகிய ஏராலே உழுதுண்ணும் புலவருடைய புதிய கவிகளைக் கொள்ளைகொண்டு உண்ணும் மதில் சூழ்ந்த புனலையுடைத்தாகிய மதுரையை உடையவனே," என்று கூறுகிறார்.

இதனைக்கண், அமைச்சரைப்போல, நூல்வல்ல புலவர்களும் மதுரைக்கண் இருந்தனர் என்றும், பேர் அரசனாகிய பாண்டியற்கு அவர் தம் செவி செய்யாகவும், சான்றோர் செய்யுள் நீராகவும், அவர் தம் நா ஏர் ஆகவும் கொண்டு புலம் உழுதுண்ணும் புலவர் என்றும், அவர் புதிய புதிய கவிகளை மிகுதியாகப் பாடுபவர் என்றும், அச்செய்யுள் வளத்தைக் கொள்ளைகொண்டு உண்டது மதுரை என்றும் கூறியது காண்க.

(11) **கலித்தொகை—35**

"நிலனாவிற் றிரிதரூஉம் நீணமாடக் கூடலார
புலனாவிற் பிறந்தசொற் புதிதுண்ணும் பொழுதனறே"

என்று வருதலும் காண்க

இதன்கண் 'கூடலார் புலனாவில சொறபுதிது' என்றது, மதுரையின்கண் உளள புலவர்தம அறிவுடை நாவின்கண் தோன்றும சொற்புதுமை (அதாவது, புதிய பாடல்கள) எனறதாம

இது, கூடலின்கண இருநத சங்கததில் தமிழா ராய்நத புலவாகளையும, அவாகளுடைய அறிவுடைய நா வன்மையையும் அவர்கள புதிது புதிதாகப பாடும் செய யுட்டிறததையும குறிககது என்று எளிதில அறியககிடக கின்றது

(12) **காரிக்கண்ணனார்—புறம்—58**

"இமிழ்குரன முரசம மூனறுடன நாளும
தமிழ்கெழு கூடல தணகோல் வேந்தே"

ஈணடு, 'முரசம. . .. கூடல்" என்றது மூனறு முரசு களுடன் முத்தமிழும ஆராயபபடுகின்ற சிறபபுபபற்றி என்க முத்தமிழையும ஆராயவதறகுச சஙகம் இன்றி யமையாமை தெளிக

(13) **பதிற்றுப்பத்து—ஒன்பதாம் பத்துப்பதிகம்**

"பொத்தி யாண்ட பெருஞ்சோ ழனையும
விததை யாணடவிளம பழையன மாறனையும
வைதத வஞ்சினம வாய்பப வென்று"

இதில, 'விததையாணட மாறன்' என்றது, முததமிழை யும ஆண்ட (ஆராய்ந்த) மாறனாகிய பாண்டியன் என்ப தாம

'போததியாண்ட சோழன்'—என்றது, பொததியார் என்னும் பாண்டிநாட்டுப் புலவர் தாம் நேரிற்பார்க்காமலே தம் உணர்ச்சியால் வசப்படுத்திய கோப்பெருஞ் சோழன் என்பதாம்

பழையன மாறனைப்பற்றி

"இழையணி யானைப் பழையன் மாறன
மாடமலி மறுகில கூடலாகதண" (அகம்-346)

என்று அகநானூற்றில் கூறியிருப்பதைக்கொண்டு, அவன் மதுரையை ஆண்ட முடி அரசர்களில் ஒருவன் என்பதும், அவன் சங்கம் இருந்து முத்தமிழையும் ஆராய்ந்தான் என்பதும் அறிகின்றோம்

(14) அகநானூறு—உரைப்பாயிரம்

"பழுதில் கொள்கை வழுதியா அவைக்கண
அறிவு வீற்றிருந்த செறிவுடை மனதது
வானறோய நலலிசைச சானறோர் குழீஇ
அருந்தமிழ் மூன்றும் தெரிந்த காலை"

என்று இடைவள நாட்டு மணக்குடியான பால வண்ண தேவனான வில்லவதரையன் கூறுதல காண்க

இம மணக்குடி எனனும ஊரைச சேர்ந்தவரே திருக்குறளுக்கு உரையெழுதிய மணக்குடியார் என்பவர் அவருடைய இயற்பெயர் இன்னதென்ன விளங்கவில்லை இதனை அறியார் அவரை மணக்குடவர் என்றும் மணக்குடையார் என்றும் கூறுவர்

(15) பரிபாடல்—19

"புலத்தினும, போரிலும் போர்தோலாக் கூடல்"

என்னும அடிக்கு உரையாசிரியர் பரிமேலழகர் கூறுவதாவது—"அறிவினும் வீரத்தினும் பிறரைப் போர்வெல்லுங் கூடல," என்பதே

கூடலில் போரில் தோலாதார பலர் உளராதல் போலவே, புலத்தில் (புலமையில்) தோலாதார பலா உளராதலே இது குறிக்கும்

போர் தோலாமைக்குப் போா அவை (Military College) இருந்ததனை இப் பரிபாடல் வருணித்திருக்கிறது போலவே, புலமையிற் தோலாமைக்குத் தமிழ்ச்சங்கம (புலவர் அவை) இருந்ததனையும வருணித்திருக்கிறது

ஆமூர் மல்லனை மற்போரில் அட்டு வென்ற பெருநற்கிள்ளி என்பவன் போா அவை காணப் பொருநனன் என்பது,

"ஆடா டென்ப ஒருசா ரோரே
ஆடன றென்ப ஒருசா ரோரே (புற-85)

என்னும் பாட்டால் அறியலாம்

இதனுல சோழன் பெருநற்கிள்ளி போா அவை (Military College) ஒன்று புரந்தனன் என்பதும, அதனுனே அவனுக்குப் "போர் அவைக்கோ பெருநறகிள்ளி" என்று பெயா உண்டாயிற்று என்பதும் அறிந்ததாம. இச்சோழனைப் போலவே பாண்டியரும, சேரரும போா அவைகள் வைத்திருந்தாாகள

இதனை அறியாா சிலா போா அவைக்கோ என்ற சொறறொடரை போர்வைக்கோ என்று எழுதிப் பதிப்பித்துவிட்டதோடு நில்லாமல் அவ்வாறு பேசியும வருகிறாாசள்.

(16) பரிபாடல்—6-ல்

"தமிழ் வையைத் தண்ணம் புனல"

என்று கூடலில் நடந்த தமிழ்ச்சங்கத்தைப்பற்றி கூறி இருப்பது காண்க

(17) ஔவையார்

சஙகத் தமிழ்மூன்றுந் தா"

என்று தாம பாடிய 'நல்வழியில்' சஙகததாரால் வளர்க கபபட்ட முததமிழ்களைபபற்றியும கூறியுளளது காண்க, இவவமமையார கடைசசங்கப புலவர்களில் ஒருவர் அதிகமான் அஞசி என்பவனுககு உயிரத் துணைவர் புறநானூறறில இவருடைய பாட்டுகள பல உளளன இவருடைய கூற்றில ஐயங்கொளபவன் உலகினகண் அல கையாய் எண்ணபபடுவான்

இதுவரை சஙக நூல்களில இருநதும, சஙக காலத துப புலவாகளுடைய வாககில இருந்தும. செப்பேட்டுச சாசனங்களில இருநதும, கல்வெட்டுச சாசனங்களில் இருநதும, பிற நாட்டுச சரிதப பகுதிகளில இருநதும சஙகம நடைபெற்றதறகுப பல ஆதாரஙகள காட்டினோம

இனிக் கடைசசங்கததை அடுதது இருநத சான்றோர் களுடைய வாககுகளையும காணபோம

(18) மாணிக்கவாசகர்

"உறைவான் உயர்மதிற் கூடலில ஆயந்தஒண் தீந்தமிழின
துறைவாய நுழைந்தனையோ அனறி? ஏழிசைச சூழலபுக்கோ"

என்று கி. பி 250 முதல கி பி. 282-வரை வாழ்நத மாணிககவாசகா கூடலில் நடநதுவந்த கடைசசங்கத் தைபபற்றிப பாடி இருககின்றார

கடைசசங்கம் அழிவெய்தியது கி பி 235-ல் ஆதலின், சங்கத்தை அடுத்து இருநதவர் மாணிககவாசகர் ஆவார இவர் கடைசசங்கம முடிவுபெற்ற 15 ஆண்டுகளுககு எல்லாம பாண்டி நாட்டில் ஏழு கல் தொலைவில உள்ள திருவாதவூரில் பிறநதவர் பாண்டி நாட்டிலேயே பாண் டியன் மந்திரியாகத் திகழ்நதவா பிறகு, துறவு பூண்டு, தில்லைக்குச் சென்று ஆங்கு முததி அடைநதவர் கூடலில் நடைபெற்ற சங்கததைபபற்றி அவா கேள்விபபட்டு

இருந்ததோடு, மந்திரியாய் இருந்த காலத்து, அரசாங்க ஆதரவுகளையும் படித்துத் தெரிந்தவர் ஆதலின், அவருடைய கூற்று மிக வன்மையுடையது ஆகும்.

(19) **அப்பர் சுவாமிகள்**

மாணிக்கவாசகரை அடுத்து இருந்தவர் திருவாரூர் அப்பர் சுவாமிகள். அவர், "**நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி, நற்கனகக்கிழி தருமிக்கு அருளினோன் காண**," என்று சங்க காலத்தில் நடந்த ஒரு சரித்திரத்தைப் பற்றித் திருப்புத்தூர் தேவாரத்தில் பாடியுள்ளார். இவருடைய காலம் கி. பி. **567 முதல் 648** வரை ஆகும்.

ஆலவாய்ப் பெருமான் புலவர் வேடம் தாங்கி, தமிழ்ச் சங்கத்தில் வாதம்செய்து, தருமி என்னும் ஓர் அன்பனுக்கு பொற்கிழி வாங்கிக் கொடுத்ததைப் பற்றிப் பாடியுள்ளார். இது நடந்தது கடைச்சங்கத்தின் கடைசிக் காலத்தில். 'கொங்கு தேர் வாழ்க்கை' என்னும் பாட்டைப்பற்றி நிகழ்ந்த வாதத்தைக் குறிப்பிட்டுள்ளார். ஆலவாய்ப் பெருமான் நக்கீரரோடு வாதம் புரிந்தார் என்பது சரித்திரம். ஆதலால், இது நடந்தது கி. பி. மூன்றாம் நூற்றாண்டு ஆகும்.

(20) **திருஞான சம்பந்த சுவாமிகள்**

"புகலி ஞானசம்பந்தன் உரைசெய் **சங்கமலி** செந்தமிழ்கள்"
(திருத்தேவூர்)

"அற்றன்றி **அந்தண் மதுரைத்தொகை ஆக்கினனும்**"
(பொதுப்பாடல்)

கி. பி. 7-ம் நூற்றாண்டில் அதாவது **கி. பி. 634 முதல் கி. பி. 650** வரை வாழ்ந்த சம்பந்த சுவாமிகள், அவர் காலத்தில் சங்கத் தமிழ் நூல்கள் மிக்கு வழங்கிவந்ததனால்,

அவற்றினையும் பல பொருள்களை எடுத்துத் தம்முடைய தெய்வப்பாக்களில் புகுத்திப் பாடியுள்ளது காண்க.

அவர் காலத்திலேயே **தொகை நூல்கள்** எல்லாம் தொகுக்கப்பட்டு முடிவுற்று இருந்தன என்றும் அவருடைய கூற்றால் தெரிகிறது.

**(21) ஆண்டாள் என்கிற கோதையார்**

**"சங்க முத்தமிழ்"** என்று பெரிய திருமொழி 3-4-10-ல் பாடியுள்ளார். இவரும் கி. பி. எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்.

**(22) புறத்திரட்டு—புகழ் மாலை**

"பாடு தமிழ்வளர்த்த கூடலின் வடாஅது"

என்று நாஞ்சில் நாடு எனும் வள்ளியின் ஊராகிய **வள்ளியம்பதி, தமிழ்ச்சங்கம் இருந்த கூடலுக்கு** வடக்கே உள்ளது என்று கூறப்பட்டுள்ளது.

**(23) சேக்கிழார்**

மூர்த்திநாயனார் புராணப் பாட்டு—**5—7**

"சால்பாய மும்மைத் **தமிழ்தங்கிய அங்கண் மூதூர்**
நூல்பா யிடத்தும் முள; நோன்றலை மேதி பாயப்
பால்பாய முலைதோய் மதுப்பங்கயம் பாய எங்கும்
சேல்பாய தடத்தும் முளசெய்யுணமிக் கேறு **சங்கம்**

"மும்மைப் புவனங்களில்மிக் கதனேயமமூதூர்
மெய்ம்மைப் பொருளாம தமிழ்நூலின் விளங்குவாய்மைச்
செம்மைப் பொருளும் தருவார் **திருவாலவாயில்**
எம்மைப் பவம் தீர்ப்பவர் **சங்கம் இருந்ததென்றால்**"

என்று தமிழ்ச்சங்கம் மதுரையின்கண் நடைபெற்றதைப் பற்றிப் பாடியுள்ளார் தெய்வச் சேக்கிழார் பெருமான். சரித்திரச் சான்று இல்லைபோல் பாடமாட்டார்.

மூர்த்தி நாயனார் என்பவர் மதுரையில் கி. பி. 520 முதல் கி. பி 575 வரை ஐம்பத்து ஐந்து ஆண்டுகள் அரசாண்டவர். களப்பிரர் ஆட்சி முடிந்ததும் இவருடைய ஆட்சி திருவருட் சம்மதத்துடன் ஆரம்பமாயிற்று.

(24) பிற்காலத்தவர்

"செந்தமிழ் நாடே
சந்தனப் பொதியைச் செந்தமிழ் முனியும்
சவுந்தர பாண்டியன் எனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டி வளநாடென்ப" என்பதனால்,

கடைச்சங்கம் முடிவு அடைந்தபின் அடுத்தடுத்து இருந்த அடியார்கள் அன்பர்களுடைய வாக்குகளில் இருந்தும் சங்கம் நடைபெற்றது உண்மையெனக் காட்டினோம்.

சங்க நூல்களையும், சங்கப் புலவர்களுடைய கூற்றுக்களையும், செப்பேட்டுச் சாசனங்களையும், பிறநாட்டுச் சரித்திரச் சான்றுகளையும், அன்பர்களுடைய கவிகளையும் நம்பாமல், தற்காலம் சங்கமே இருந்ததில்லை என்று கூறுவார் கூற்று எவ்வளவு தூரம் பொருத்தமுடைத்து என்று பாருங்கள். அவர்கள் எல்லாம்,

"நோயின்று காக்கை வெளிதென்பார்
என்சொல்லார் தாயக்கொலை சால்புடைத்து
என்பாரும் உண்டு"

என்ற முதுமொழிக்கு இலக்கு ஆனவர்களே. ஆதலின், அன்னவர் கூற்றுக்களைக்கொண்டு மயங்கற்க.

பின் இணைப்பு 1 முற்றிற்று.

# பின் இணைப்பு—II

## கால வரிசைப் பொருள் அட்டவணை

**30,000** B C—**16,500** B C—பஃறுளியாற்றுத் தென்மதுரைத் தமிழ்ச் சங்கம நடைபெற்ற காலம் இஃது உருவ எழுததுக காலம இச்சஙகம இரீஇய பாண்டியன் —

ஆழிவடிமபலமபநின்ற பாண்டியன் என்கிற பாண்டியன் நெடியோன் என்கிற முதலாம நிலந்தரு திருவிற பாண்டியன் என்கிற பாண்டியன் மாகீர்த்தி

இவன் வழிவநத பாண்டியாகள தமிழ்நாட்டை 13,500 ஆண்டுகள அரசாணடாாகள

**16,500** B C.—**16,000** B C—தமிழ்நாட்டில நிருதர்களுடைய ஆடசி நடைபெற்ற காலம நிருதிநாடு என்பது தற்காலம ஆபிரிக்கா என்று வழங்கபபடுகிறது நிருதாகளில கடைசியாகத தமிழ்நாட்டை ஆண்டவாகள, உடுக்கண்ணன் (தாரகாககன்), மரைக்கண்ணன (கமலாக்கன்) அறிவுடைமாலி (வித்தியுன் மாலி) என்ற மூவர் இவாகள் திரிபுராதிகள் என்னபபடுவா.

**16,000** B C.—முபபுரம எரிககபபட்டது முப்புர நிருதர் மூவரும தமிழ் அரசனிடம அடைக்கலம் புகுந்தது

**16,000** B. C—**14,550** B. C—மகேந்திரமலைத தமிழ்ச் சங்கம் நடைபெற்ற காலம். இதுவும் உருவஎழுத்துக் காலம சங்கம இரீஇயவர் திரிபுரத்தை எரித்த விரிசடைபபெருமானாகிய பரமேசசுரன். புலவர் குழாஅத்துள் ஒருவர். பொதியமலை அகத்தியர்.

இசசங்கத்தில பாடபபட்டன 'மகேச சூததிரம' 'ஐந்திணை அகநூல்' என்ற நூல்கள் களவியல் என்னும ஐந்திணை அகநூல் இப்போது முழுவதும கிடைததுள்ளது

**16,000 B. C —3105 B C**—பொதியமலைத தமிழச்சஙகம நடைபெற்ற காலம. இச்சங்கமானது பொதியமலை அகததியரால் கி மு 16,000-ல் பாபநாசததில் ஆரமபிககபபட்டது அதுமுதல இடைசசங்கமுடிவு வரை, அதாவது, கி மு 3 105-வரை இச்சங்கததைதப பற்றிக் கேள்விபபடுகிறோம அதற்கபபுறம எவவளவு காலம நடைபெற்றுவநதது என்பது ஆராயததககது இசசஙகம ஒன்றேதான் யாதொரு இடையூறும இன்றி உருவ எழுதது—கோல எழுத்து—வட்டெழுத்து—சதுர எழுததுக் காலஙகளில எல்லாம நடைபெற்று வநதிருக்கிறது

**14,550 B C — 14,490 B C**—மணிமலைத தமிழ்சசஙகம நடைபெறற காலம இதுவும உருவ எழுததுக காலம இசசஙகததை இரீஇயவா ஒளியா கோமான செங்கோ என்னும பேரரசன் இசசங்கததுககுத தலைமை வகிதது நடததியவன் சககரன என்னும புலவன் தனியூரச சேநதன, முதநூா அகததியன் முதலிய புலவாகள சங்க உறுபபினாகள இசசஙகததிற்கு நூல பேராற்று நெடுநதுறையன் பெருநூலும், இடைகழிச செங்கோடன் இயனூலும ஆம்

**14,490 B C —14,058 B. C**—தமிழ் நாட்டில சீனதேசத்து அவுணா ஆட்சிக் காலம. அவுணரில் கடைசியாகத தமிழ் நாட்டை ஆண்டவாகள் சூரபதுமன் — சிங்கமுகன் — தாருகன் — பானுகோபன் முதலியோா

**14,058 B C**—குமரவேள்—சூரபதுமன் போர். அவுணர் ஆட்சி ஒழிந்தது. ஒரு பெரிய கடல்கோள் ஏற்பட்டுத் தமிழ் நாட்டில் பெரும் பாகம், 49 கொடுமுடிகளை யுடைய மேருமலையுடன் அழிபட்டது. இந்தக் கடல் கோளைத்தான் உரையாசிரியர்கள் '**ஆதியூழி**' என்றும், பெரிய (மகா) பிரளயம் என்றும் கூறுவர்.

**14,058 B C.**—**ஆதியூழி**, அல்லது பெரிய பிரளயம் ஒளிநாடு—பெருவள நாடு முழுவதும் குமரி நாட்டில் சில பாகங்களும் அழிவுண்டன.

**14,058 B C—14,004 B C**—அவுணரைத் தமிழ் நாட்டினின்றும் துரத்திய குன்றம் எறிந்த குமரவேள் **திருச்செந்தூரில்** ஒரு தமிழ்ச் சங்கத்தை ஏற்பாடு செய்து அது நடைபெற்ற காலம். இது **கோல் எழுத்துக் காலம்**. இச்சங்கத்தில் வாதாபி **அகத்தியர்—புலத்தியர்**—சனகர்—சனற்குமாரர் **முதலியோர் குமர** வேளிடத்தில் தமிழ் கற்று, சங்கத்தில் உறுப்பின ராகவும் இருந்தார்கள். இச்சங்கத்திற்கு நூல் '**குமரம்**' என்னும் பேரிலக்கண நூலும், '**முருகன் அகப்பொருள் விருத்தி**' என்ற அக நூலும், **வாதாபி அகத்தியமும்** ஆம்.

**14,004 B C—9564 B C**—குமரியாற்றுத் **தென்மதுரை** யில் நடந்த **தலைச்சங்கம்** நடைபெற்ற காலம். சங்கம் இரீஇயவர் காய்சின வழுதி முதல் முதலாம் **கடுங்** கோன் ஈறாக 89 பாண்டியர்கள். இச்சங்கம் **கோல் எழுத்துக்** காலத்தில் நடைபெற்றது. இச்சங்கத்திற்கு நூல் வாதாபி அகத்தியமும், குமரம் முதலிய முந்திய சங்கங்களின் நூல்களும் ஆம்.

**9564** B. C.—இரண்டாம கடல கோள் **இரண்டாம ஊழி** என்பா இவ்வூழியிலும குமரி நாட்டில் பெரும்பாகம கடல்கொண்டொழிந்தது

**9,564** B. C—**3105** B C—தமிழ் நாட்டில அரககா ஆட்சிக் காலம அரககர்களாகிய சோமுகன், தக்கன், இரணியன், இரணியாககன் முதலியோரும அவா பரமபரையினரும் அரசாண்டார்கள

**7,500** B C.—பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டியன் அரக்கரோடு போா தொடுதது தமிழ் நாட்டில் சில கூற்றங்களைக கைக்கொளளல

**7,500** B C—**6,900** B C—**கொறகை** எனனும கடற்றுறைப் பட்டிணத்தில் முதுகுடுமிப் பெருவழுதியால தொடங்கப்பெற்ற தமிழ்ச சங்கம நடைபெற்ற காலம தமிழ் மொழிக்கு இது வட்டெழுத்துக காலம இச சங்கததில **ஐந்திரம்** என்னும் தமிழ் இலககண நூலும பயிலப்பட்டு வநதது இநதிரனால செயயபபட்ட நூல் ஐந்திரம இது **வடமொழி ஐநதிர நூலுககும** முற்பட்டது

**6,900** B. C.—**6805** B C—தமிழ் நாடு மறுபடியும அரக்கா ஆட்சிககு உட்படடது

**6,805** B. C.—**3105** B C—இடைசசங்க காலம. பொருநை (தாமபிரபரணி) ஆற்று முகததுவாரததில் இருந்த **கபாடபுரத்தில்** வெண்டேர்சசெழியன் எனனும் பாண்டியனால் நிறுவப்பட்டு, 79 பாண்டியாகளால புரக்கப்படடு வநதது இசசங்கததின் கடைசி அரசன் **முதலாம முடத்திருமாறன்** என்பான்

இச்சங்கம் தொடங்கப்பட்டு கி. மு. 6000-வரை தமிழ் மொழி வட்டெழுத்தாகவும், பிறகு சதுர எழுத்தாகவும் நடைபெற்றது. கி. மு. 6000-ல் சதுர எழுத்து ஆரம்பமானபொழுது தொல்காப்பியர் என்பார் தொல்காப்பியம் என்ற இலக்கண நூலை யாத்து, இடைச்சங்கத்தில் தலைமை வகித்து நடத்தி வந்தார்.

**3105** B C—இடைச்சங்கம் துவரைக் கோமானை கண்ணபிரானால் அழிக்கப்பட்டது. தமிழ் நாட்டில் அரசர் நிலை குலைந்தனர். பாரதச் சண்டையின் முடிவு.

**3102** B C—கலியுகம் பிறந்தது.

2387 B C—கடல் கோள்

2344 B. C—மேற்படி கடல் கோள்

2,300 B C—கடல் கோள்

2,030 B C—கடல் கோள்

இக்கடல் கோள்களால் தமிழ் நாட்டில் பல பாகங்கள் கடலில் அமிழ்ந்தன.

**1915** B C—**1715** B C—திருப்பரங்குன்றத்துத் தென் மதுரைத் தமிழ்ச்சங்கம் நடைபெற்ற காலம். இது சதுர எழுத்துக் காலம். இச்சங்கம் **இரண்டாம் முடத்திருமாறன்** என்னும் பாண்டியனால் நிறுவப்பட்டது.

**1715** B C—கடையூழி.

**1715** B C—**235** A D—நான்மாடக் கூடலில் நடைபெற்ற **கடைச்சங்க காலம்**. சதுர எழுத்துக் காலம். சங்கம் இரீஇயவர் மூன்றும் முடத்திருமாறன் முதலாக உக்கிரப்பெருவழுதி ஈறாக 49 பாண்டியர்.

தொகை நூல்களாகிய பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு முதலிய நூல்கள் எல்லாம் தொகுக்கப்பட்ட காலம் இச்சங்கம் நடைபெறும்போது கி பி 144-ல் கோவலன் கொலையுண்டான் மதுரை எரிக்கப்பட்டது

**235 A D —340 A D** —பாண்டியர் ஆட்சி

**340 A D —520 A D** —பாண்டிய நாட்டில் வடுகக் கருநடர் ஆட்சி இவர்களைக் **களப்பிரர்** என்பார் இவர்கள் **சமண** மதத்தைக் கொண்டவர்கள் இவர்களுடைய ஆட்சியில் கி பி 470-ல் வச்சிரநந்தி எனனும் சமண முனிவன் திருப்பரங்குன்றத்துத் தென்மதுரையில் ஓர் தமிழ்ச் சங்கத்தை நிறுவி, அவனே தலைமை வகித்து நடத்திவந்தான்

**470 A D.—520 A D** —வச்சிரநந்தி தமிழ்ச்சங்கம் நடைபெற்ற காலம்

**520 A D** —களப்பிரர் ஆட்சியின் முடிவு வச்சிரநந்தி தமிழ்ச் சங்கத்தின் முடிவு

**520 A D —575 A D** —பாண்டிய நாட்டில் மூர்த்தி நாயனார் ஆட்சி

**575 A D.—600 A D.**—பாண்டியன் இரண்டாம் கடுங்கோன் ஆட்சி இவனுடைய மறுபெயர் **பாண்டியன் அதிராசன்**

**600—625 A D** —பாண்டியன் மாறவர்மன் அவனிசூளாமணி எ* அதிராச மாறவர்மன் ஆட்சி

**625—640 A D** —செழியன் சேந்தன் எ சடையவர்மன் ஆட்சி இவன் மறுபெயர்களாவன —

---

* எ=என்கிற

சிலைத்தடக்கைக் கொலைக்களிற்றுச் செழியன், மண்மகளை மறுக்கடிந்த வேந்தர்வேந்தன், செங்கோற்சேந்தன் முதலியன

**640—670** A D —மாறவர்மன் அரிகேசரி எ கூன்பாண்டியன் எ சுந்தரபாண்டியன் எ நின்றசீர் நெடுமாறன் இவன் திருஞானசம்பந்தர் காலத்தவன் சமண மதத்தினின்றும் சைவனாக்கப்பட்டவன்

**670—710** A D —கோச்சடையன் இரணதீரன் ஆட்சி இவன் சுந்தரர் காலத்தவன்

**710—765** A D —அரிகேசரி பராங்குச மாறவர்மன் எ தேர்மாறன் எ இராசசிம்மன் I ஆட்சி

**765—790** A D —நெடுஞ்சடையன் பராந்தகன் I எ சடையவர்மன் ஆட்சி

**790—800** A D —இராசசிம்மன் II எ மாறவர்மன் ஆட்சி

**800—830** A. D —வரகுணன் III எ சடையவர்மன் ஆட்சி.

**830—862** A D —சீமாறன் பரசக்கர கோலாகலன் எ மாறவர்மன் ஆட்சி

**862—882** A D —வரகுணன் IV என்கிற மாறன் சடையன் ஆட்சி.

**882—900** A D —பராந்தகன் III என்கிற சடையவர்மன் ஆட்சி

**900—919** A D இராசசிம்மன் III ஆட்சி

**919—948** A. D —இக்காலத்தில் பாண்டிநாடு **சோழர்க**ளால் ஆளப்பட்டது

**948—968** A. D.—வீரபாண்டியன் I ஆட்சி

**968—995** A D —அமரபுயங்கன் ஆட்சி.

**995—1048** A D —மறுபடியும் பாண்டியநாடு **சோழர்** **ஆட்சியில் வந்தது**

**1048—1084** A D —ஐவர் பாண்டியர் ஆண்டனர் அவர்கள் பெயர்கள் விளங்கவில்லை

**1084—1100** A D —மாறவர்மன் திரிபுவனச் சக்கிரவர்த்தி பராக்கிரம பாண்டியன் ஆட்சி

**1100—1105** A D —சடையவர்மன் பராந்தகன் IV ஆட்சி

**1105—1122** A D —மாறவர்மன் சீவல்லபன் ஆட்சி

**1122—1142** A D —சடையவர்மன் **குலசேகர பாண்டியன்** I ஆட்சி இவன் காலத்திலதான் பாண்டிய நாடு **தென்பாண்டி—வடபாண்டி** எனப் பிரிக்கப்பட்டது இவன் தென்பாண்டியில் அரசாண்டான்

இவன் தம்பி **பராக்கிரம பாண்டியன்** I (1122—1140 A D ) வடபாண்டியில் அரசாண்டான்

**1142—1190** A D —மாறவர்மன் விக்கிரம பாண்டியன் II என்பவனுடைய ஆட்சி **தென்பாண்டியில்** நடை பெற்றது

வடபாண்டியில் 1140 A D முதல் 1145 A D வரை வீரபாண்டியன் III அரசாண்டான் கி பி 1145-ல் வீரபாண்டியன் III என்பவன் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் II உடன் சண்டையிட்டு, முறியடிக்கப்பட்டு, திருவாங்கூருக்கு ஓடிப்போய் விட்டான் வடபாண்டி தென்பாண்டியோடு சேர்க்கப்பட்டது

**1190—1216** A D —சடையவர்மன் குலசேகரபாண்டியன் II என்பவன் ஆட்சி

**1216—1238** A D.—மாறவர்மன் சுந்தரபாண்டியன் I என்பவன் ஆட்சி

**1238**—A D —சடையவர்மன் குலசேகர பாண்டியன் III என்பவன் ஆட்சி சில மாதங்களே நடைபெற்றது.

**1238—1251** A. D —மாறவர்மன் சுந்தரபாண்டியன் II என்பவன் ஆட்சி

**1251—1268** A D —சடையவர்மன் சுந்தரபாண்டியன் I என்பவன் ஆட்சி இவனுக்குக்கீழ் வீரபாண்டியன் IV (1252—1267 A D ) என்பவனும், மாறவர்மன் சீவல்ல பாண்டியன் (1257—1292 A D ) என்பவனும் ஆட்சிபுரிந்துள்ளார்கள்.

**1268—1310** A D —மாறவர்மன் குலசேகர பாண்டியன் I என்பவன் ஆட்சி இவனுக்குக்கீழ் மாறவர்மன் விக்கிரம பாண்டியன் (1285—1291 A D ) ஆட்சி புரிந்தான்.

**1310—1320** A D —சடையவர்மன் சுந்தரபாண்டியன் II என்பவன் ஆட்சி.

**1296—1342** A D -சடையவர்மன் வீரபாண்டியன் ஆட்சி.

**1330—1377** A D —பாண்டிநாட்டில் மகமதியர் ஆட்சி அக்காலத்தில் பாண்டியர் மகமதியருக்குக் கப்பம் கட்டிவந்தார்கள்

**1314—1346** A D —மாறவர்மன் குலசேகர பாண்டியன் II ஆட்சி.

**1315—1347** A. D —சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் I ஆட்சி

**1334—1380** A D —மாறவர்மன் வீரபாண்டியன் I ஆட்சி

**1335—1352 A D**—மாறவர்மன் பராக்கிரம பாண்டியன் ஆட்சி

**குறிப்பு:**—மகமதியர் ஆட்சி காலத்தில் பாண்டி நாட்டைப் பல பாண்டியர்கள் **மதுரை—தென்காசி—கரிவலமவந்த நல்லூர்** முதலிய இடங்களில் தனித்தனியாக அரசாண்டார்கள் என்றும் கப்பங்கட்டி வந்தார்கள் என்றும் தெரிகிறது

**1364 A D**—விசயநகர வேந்தன் **குமாரகம்பண்ணன** பாண்டி நாட்டுப் படை எடுப்பு

(வடபாண்டியில் விசயநகர அரசனும் மகமதியரும் சண்டையிட்டுக்கொண்டு இருந்தபோது, தென்பாண்டியில் ஆண்டவர்கள் வருமாறு)

**1352—1390 A D**—பராக்கிரமபாண்டியன்

**1384—1415 A D.**—பராக்கிரமபாண்டியன்

**1401—1434 A D**—பராக்கிரமபாண்டியன்

**இம்மூவரும் தனிப்பட்டவர் ஒருவரே அல்ல**

**1401—1463 A D**—சடையவர்மன் பராக்கிரம பாண்டியன்

**1422—1473 A D**—சடையவர்மன் குலசேகர ,,

**1473—1506 A D**—அழகன்பெருமாள் பராக்கிரம ,,

**1479—1499 A D**—பராக்கிரம குலசேகரதேவன்

**1506—1534 A. D**—ஆகவராம பாண்டியன்.

**1543—1543 A D**—சடையவர்மன் சீவல்லபபாண்டியன்

**1543—1552 A D**—சடையவர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியன்.

**1552—1564 A. D**—நெல்வேலிமாறன்.

**1564—1604 A D**—சடையவர்மன் அதிவீரராம பாண்டியன

**1588—1613 A D**—வரதுங்கராம பாண்டியன்

**1613—1700 A D**—வரகுணராமகுலசேகர சோமாசியார

**1700—1748 A. D**—வரகுணராம பாண்டிய குலசேகர தேவதீட்சிதா

(இதுவரை கல்வெட்டுக்களால தெரிந்த பெயாகள் இவையாகும இன்னும பல பாண்டியர்கள பெயாகள இடையிடையே உள்ளன )

**19-ம நூற்றுண்டில்** விசயநகர வமிசத்தைச சோநத நாயககா அரசாட்சியினின்றும **ஆங்கிலேயா ஆட்சிக்குப் பாண்டியநாடு** வநதது

20-ம நூற்றுண்டின் ஆரமபத்தில, ஆங்கில அரசாட்சியில், அதாவது, **1910-ம ஆண்டு மே-மாதம 24-ம தேதி**யில இப்போது நடைபெற்றுவரும **நானகாம தமிழ்ச்சஙகம** பாலவனத்தம சமீன்தாா **பொ பாண்டித்துரைத தேவா** அவாகளால் கூடல் எ மதுரையில் ஆரமபிக்கப்பட்டது

பல தமிழ்ச்சஙகங்கள நடைபெற்றிருக்க இதனை **நான்காம தமிழ்சசஙகம** என்று கூறுவானேன் என்றால், தலை—இடை—கடைச சஙகஙகளாகிய **முச்சஙகஙகளைப்** பற்றியே எலலோரும கூறிக்கொண்டிருப்பதால, இது **நான்காம** சஙகம என்னப்பட்டது என்க

**களவியல—தொல்காப்பியம** என்னும இரண்டு நூல**களில் குறிப்பிடப்பட்ட தமிழ்சசஙகங்களின் காலங்களைப் பற்றியும, திருவிய பாண்டிய அரசாகளைப்பற்றியும், கல்வெட்டு—சாசனம—இலக்கியம முதலிய சான்றுகளைக் கொண்டு இங்கே விளக்கிக் காட்டப்பட்டுள்ளது.**

ஆழிவடிமபலமபநின்ற பாண்டியன் I என்பவனைப பற்றியும—தமிழ் நாட்டில் ஆண்ட அன்னியர்களாகிய நிருதா—அவுணா—அரக்கா—ஆரியாகளைப்பற்றியும பல ஆதாரங்களுடனும, குடிவழிபபட்டியுடனும தமிழ்நாட்டுச் சரிததிரம எழுதபபட்டு வருகின்றது விரைவில வெளி வரும விரிவினை ஆண்டுக கணடுகொளக

(பின் இணைப்பு II—முற்றும்)



# தமிழ்நாட்டு வரலாறு

**மோகஞ்சதரோ, சிந்துவெளி நாகரிகம் :** மா இராச
மாணிக்கம பிள்ளை தமிழ் மககளின் நாகரிக
விளக்கத்தைத் தெளியக் காட்டும சிறந்த
நூல அடடைக கட்டடம 2 8
கெடி கலிககா 3 8

**குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு**
கா அபபாததுரைப பிள்ளை குமரிக்குத்
தெற்கே பெரிய நிலபபரபபு நீரில ஆழநத
வரலாறும ஆராய்சசியும தமிழ்நாட்டின
தொன்மை யுணாததும சிறநத நூல 1 4
கெடி கலிககா 1 12

**பல்லவா வரலாறு** புலவர் மா இராசமாணிககம
தமிழ்நாடடு வரலாற்றில பல்லவா வரலாறு
சிறநத பகுதியாகும அதனைப பல நூல மேற்
கோளகளுடன் விளககுவது தமிழர் ஒவ
வொருவரும படிககதற்குரியது விளககப
படஙகளுடன் அட்டைக கட்டடம விலை 3 8
கெடி கலிககா 4 8

**தமிழகம் :** ந சி கந்தையா
தமிழ்நாட்டின் விளககமான வரலாறு பண்
டைய நிலையை அறியவும வருஙகாலததை
உறுதிபபடுத்தவும் துணை செய்வது கருததா
லும, பொருளாலும் விரிவு பெற்ற 2-ம பதிபபு 3 12

**தமிழ் இந்தியா :** ஆசிரியர் N. S கந்தையா
தமிழர் தொன்மைக காலம், தமிழர் மாண்பு,
சமயம், குமரிக்கண்டம, மொகஞ்சதரோ முத
லிய பொருள்பற்றி நூற்றுக்கு மேற்பட்ட
ஆங்கில நூல்கள் தமிழ் நூல்களிலிருந்து மேற்
கோள்கள் காட்டி அரிய பல விளக்கப் படங்க
ளுடன் இதன் ஆசிரியர் எழுதியிருப்பன
படிப்பார்க்குச் சிறந்தவிருநதளிக்கும. ராப்பர் 3 8
கெடி கலிக்கா 4 8

# பழந்தமிழர் நாகரிகம்

[அன்று தமிழர் வாழ்ந்த நிலை யென்ன? அவர்கள் பண்பாட்டின் தன்மை எத்தனை சிறந்திருந்தது? அவற்றை விளக்கும் அரிய உரைநடை நூல்கள், இளவழகனார் ஆக்கியவை.]

**சங்கநூற் கட்டுரைகள்.** முதற் புத்தகம்

நாடு, அரசு, வாழ்க்கை, தொழில், வாணிகம், கலைகள், இசை, நாடகம், கடவுள் கொள்கை பற்றிய பண்டைத் தமிழ் மக்களின் பொற்ற கருத்துக்களை விளக்குவது இளவழகனாரின் தீந்தமிழ் உரைநடை

ராப்பர் 1 4
கலிக்கா 2 0 ரெக்ஸின் 3 0

**சங்கநூற் கட்டுரைகள்** இரண்டாம் புத்தகம்

பண்டைத் தமிழரது உணவு, உடை, கல்வி, பழக்கம், வழக்கம், ஒழுக்கம், விழுப்பம் முதலியன இளவழகனாரின் இன்சொல் தவழும் இன்பத் தமிழ்நடையில் நவிலப்பட்டுள்ளன

ராப்பர் 1 12
கலிக்கா 2 8 ரெக்ஸின் 3 8

**பண்டைத் தமிழரின் இன்பியல் வாழ்க்கை**

ஒத்த தலைவனும் தலைவியும் தம்முட் கண்டு காதல் கொண்டது முதல் மணந்து கூடி இல்லறம் நடாத்தி இன்பமடைதல் முடியவுள்ள வாழ்வியற் குறிப்புக்களைப் பன்னிரு தலைப்புக்களில் இனிது விளக்குவது விளக்கப் படங்களுடன்

அட்டை 2 8 கலிக்கா 3 0

**பண்டைத் தமிழரின் பொருளியல் வாழ்க்கை.**

அறம் பொருள் காரணமாக மக்கள் வாழ்க்கையிற் புறத்தே நிகழும் ஒழுக்கங்களைப் பன்னிரு தலைப்புக்களில் விளக்குவது ஏற்ற படங்களுடன் அட்டை 2 8 கலிக்கா 3 0

---

